# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்... இப்பருவத்தில் அவனுக்குக் கட்டாயம் தேவை இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




175 ml
Incremin syrup

# இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்.
ஸிரப்: 14 வயது வரையில்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்**
**உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

# திரைப்படத் தூய்மை தேவையா?

தூய்மை எப்பொழுது கெடும்? இப்படித்தான் வாழ வேண்டும் என்ற நெறி பிறழும் போது, ஆசை மிகுதி வெறியாக மாற, தூய்மை கெடுகிறது. அவ்வாறு ஆவல் மிகுதியைக் கூட்டுவது திரைப்படங்கள் மட்டும்தானா என்ன?

ஆபாசமற்றது எனப் பெரியவர்கள் எண்ணிச் 'சும்மா' இருக்க, பிள்ளைகள் படிக்கும் கதைகள் தற்காலத்தில் என்ன நீதியைப் புகட்டுகின்றன?

திரைப்படத்தால் சமுதாயம் கெடுகிறதாம். அப்படியா...? மாலை மங்கும் முன்பே அண்ணா சமாதியில் தொடங்கி காந்திச் சிலை முடிய பரந்துள்ள மணற் பரப்பில் புதைய நடக்கும் கால்கள் அனைத்தும் அக்கினியை வலம் வந்தவைகளா...? அல்லது அவை அனைத்தும் அக்கினியை வலம் வர இருப்பவை என்ற உறுதியை நாம் கொடுக்க முடியுமா?

ஆணுக்கு எட்டு முழமும் பெண்ணுக்குப் பதினாறு முழமும் விதித்தனர் நம் முன்னோர். ஏன்? ஆணைவிட இரண்டு மடங்கு பாதுகாப்பாக இருக்க வேண்டியவள் பெண். ஆனால் இன்றைக்குப் புடவை கட்டத் தெரிந்த—கட்டிய—பூவையர் எத்தனை பேர்?

எரிச்சலை வார்த்தை வடிவில் கண்டக்டர் தெரிவிக்கும் முன்பு நம்மில் எத்தனை பேர் பஸ்ஸில் ஏறியதும் முன்பக்கமாக நாமாகவே செல்கிறோம்? எந்தத் திரைப்படம் நம்மைப் பின்பக்கம் நிற்கச் சொல்லிற்று? அல்லது பஸ்ஸின் முன்பக்கத்தில் முன் வேலி இடப்பட்டிருக்கிறதா என்ன?

பாலசந்தரின் 'புன்னகை'யைப் புறக்கணித்த நாம் 'பாபி'க்குப் பல மாதங்கள் கப்பம் கட்டினோமே ஏன்...? திரைப் படங்களில் ஆபாசக் காட்சியை நாம் உண்மையாக எதிர்ப்பதாக இருந்தால் 'புன்னகை'யும் 'திக்கற்ற பார்வதி'யும் நூறு நாட்களாவது ஓடியிருக்க வேண்டாமா?

திரைப்படங்களில் மட்டும் தானா ஆபாசம்? பிளேடு விளம்பரத்துக்குக் கூட ஒரு டவலைச் சுற்றிக் கொண்டிருக்கும் பெண்ணைத்தானே படமாகப் பிடித்துப் போடுகிறார்கள்! அங்கே தூய்மை வாழ்கிறதா?

இவ்வளவையும் மீறித் திரைப்படத்தில் தூய்மை தேவை என்றால் ''ஊருக்குத்தான் உபதேசம்'' என்ற அடிப்படையில்தான் சேருமே தவிர, உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து வந்ததாக அமையாது. உள்ளம் தூய்மையாக இருக்க வேண்டும் என்ற திண்மை இருந்தால் எதுதான் நம்மைக் கெடுக்க முடியும்? கட்டைகளைத்தான் கறையான் அரிக்குமே தவிர, இரும்பை அணுகாது. —மு. கணேசன்

''திரைப்படத் தூய்மை அவசியமா?'' என்ற கேள்வியே மனத்துக்குச் சங்கடத்தை அளிக்கிறது. நமது பண்பாடு அடைந்து வரும் சீர்கேட்டையே இது குறிப்பிடுகிறது. 'தூய்மை அவசியமா?' என்று கேட்கும் அளவுக்கு ஓர் அவல நிலைமையை நாம் அடைந்திருக்கிறோம்.

அயலான் மனைவியை எப்படிப் பெண்டாளுவது, விவாகமாகாமலே உடலுறவு கொள்ளுவது எப்படி, பழிக்குப் பழி எப்படியெல்லாம் வாங்கலாம் (மகாத்மாவின் ஆத்மா சாந்தி அடைவதாக!)... இதைப் போன்ற 'சத்'தான விஷயங்களை, பட்டவர்த்தனமாகவோ, 'கலைப் படைப்பு' என்ற போர்வையிலோ திரைப் படங்கள் கையாளுகின்றன. வேதனை தருவது, இவற்றுக்குப் பாராட்டும் பரிசும் அரசே வழங்குவது! இயக்குநர்களுக்குக் 'குடியரசு' தரும் பட்டம் வேறு! இந்த மாதிரி கலைப் படங்களால் நாடு எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறதோ, அரசுக்குத்தான் வெளிச்சம்!

''அவசரநிலை''ப் பிரகடனத்துக்குப் பிறகு ''ஆபாசம், பலாத்காரம்'' ஆகியவற்றைத் திரைப் படங்களிலிருந்து அறவே ஒழிக்கப் போவதாக (மத்திய) செய்தித் துறை அமைச்சர் பல இடங்களில் முழங்கி வருகிறார். அவசர நிலைமைக்குப் பிறகு நாட்டில் சொல் குறைந்து, செயல் மிகுந்து வருகிறது. திரைப்பட விஷயங்களில் உடனடியாக அமைச்சரும் தணிக்கையாளரும் செயல்பட வேண்டும்.

மக்களுக்குத் திரைப்படங்கள் நல்வழியைக் காட்டாமற் போனு



பாபிக்குப் பல மாதங்கள் கப்பம் கட்டினோம்....

....திக்கற்ற பார்வதி நூற நாட்களாவது ஓடியிருக்க வேண்டாமா?



ஓம் சரி, அழிவுப் பாதையில் நடத்திச் செல்லாமலாவது இருக்கட்டும். வி. எஸ். சுந்தரராஜன் விஜயவாடா

**பை**யை நிரப்பும் ஒரே 'கய' நோக்குடன் படத் துறையினர் மக்களின் கீழான உணர்வுகளுக்குத் தீனி போட ஆரம்பித்தது தான் இன்று செக்ஸ் சந்தியில் நம்மை நிற்க வைத்திருக்கிறது! நியூ வேவ் படங்கள், நகைச்சுவை என்ற பெயரில் மற்ருெரு சோவில் வைக்கப்பட்ட அதே விஷம், 'கலே' என்ற பெயரில் எடுக்கப்பட்ட படங்கள் — எல்லாவற்றிற்கும் அதே மூன்றெழுத்துத் தான். 'தேன் கிண்ணம்' என்ற ஒரு படத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வசனத்தில் ஆபாசத்தை முதலில் புகுத்திய 'பெருமை' அந்தப் படத்துக்குத்தான் உண்டு. படம் ஒரு சில வாரங்கள் ஓடிவிட்டது. அது முதற்கொண்டு 'நகைச்சுவை' என்ற பெயரில் என்னென்ன அக்கிரமங்கள்... ஆபாசங்கள்!

ஷ்யாம் பெனகலின் அங்குர் முதல் படமே ஒரு மாதிரியான படம். ஆனல் '**Exploitation**' இல்லாத காரணத்தினல், டைரக்டரின் கலேத்திறன் தனித்து நின்று பளிச்சிட்டது. அநுதான் சாக்கு என்று மனிதர் 'கடைச் சரக்கு'களைச் சேர்த்து 'ஏ' சர்ட்டிபிகேட்டும் பெற்று அடுத்த படம் வெளியிட்டிருக்கிருர். இதை எப்படிப் பயனுள்ள கலேத்திறமை என்று பாராட்ட முடியும்? — ஸ்ரீதர் சாமா

''Realism, Naturality'' என்ற வார்த்தைகளுக்கு அர்த்தம் தெரியாதது போல் பாவ்லா செய்கிருர்கள் நம்மவர்கள். சந்தர்ப்பங்களுக்கு ஏற்பக் காட்சிகள் அமைக்கப்படுவதில்லே இங்கே. அமைக்கப்பட்ட காட்சிகளுக்கேற்ப சந்தர்ப்பங்கள் சிருஷ்டிக்கப்பட்டு எல்லாம் செயற்கையாகி விடுகிறது.

மனியான படங்கள் மடியாக இருந்தே தீரவேண்டும். ஏனெனில், தூய்மையில்தான் தரம் இருக்கும். கே. காந்திமதி மதுரை-2

**கா**லப்போக்குக்கு ஏற்ப எது ஆபாசம் என்று நிர்ணயப்பதில் மாறுதல் வேண்டும். மக்களின் பொருதாளார வளர்ச்சிக்கு ஏற்ப நாகரிகம் மாறுகிறது. வாழ்க்கைக்குத் தேவையானதைச் சேகரித்து வர, மனைவி, குழந்தைகளுக்காகக் கணவன், வாழ்ந்த காலம் மலே ஏறி விட்டது. இன்று பெண்கள் தனியாகவே தங்களேக் காத்துக் கொள்ள முடியும். தனி மனிதன் ஒழுக்கமும் அன்றுபோல் இன்று தேவையில்லே. ஆகவே, அன்றைய ஆபாசக் காட்சிகள் இன்று சாதாரணக் காட்சிகளே. தனி மனிதனின் பொருளாதார ஸ்திரத்தன்மை அதிகரிக்க அதிகரிக்க, ஸ்விடன் போன்ற மேலே நாடுகளில் ஆபாசத்தை நிர்ணயிப்பதில் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. காலத்துக்கு ஏற்ப மாறுபாடு செய்யவில்லேயென்ருல், கண்கூடாக இல்லாமல் மறைவாக இருக்கும். அதனல் நன்மையைவிடத் தீமையே அதிகம். ஆகவே திரைப் படத் தூய்மையை நிர்ணயிப்பதில் பரந்த மனப்பான்மை வேண்டும். — ஆ. சொ. நாராயணன்

''சர்வ வியாபி''யாக உள்ள சினிமாவில், தூய்மை அவசியமா என்ற கேள்விக்கு, அது ''சர்வ வியாபி''யாக இருப்பதாலேயே அதற்குத் தூய்மை அவசியம் என்றே பதில் கூறலாம்.

இரண்டாவதாக, அதன் வலிமை — மாபெரும் சக்தி — அதற்குத் தூய்மை அவசியம் என்பதை உணர்த்துகிறது. சினிமா பார்க்கும் இளைஞர்கள் அதில் காண்பிக்கப்படும் காட்சிகளே அப்படியே பின்பற்ற முற்படுகிருர்கள் என்பதற்குச் சமீபத்தில் இரண்டு இளைஞர்கள் தாங்கள் பார்த்த படத்தில் காட்டப்பட்ட ''பெண் கடத்தல்'' முறைகளேக் கையாண்டு போலீஸில் மாட்டிக் கொண்டதைச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூற முடியும்.

சினிமாக் கலைஞர்களேயும், நாயக நாயகிகளேயும் இளைஞர்கள் தங்கள் ''முன்மாதிரி''களாகக் கொள்வது வழக்கம். அந்த அளவுக்கு மக்கள் மனத்தில் நிலேத்து நிற்கக்கூடிய அவர்கள் தங்கள் அகவாழ்வு, புற வாழ்வு, நடிப்பு, நடத்தை எல்லாவற்றிலும் தூய்மையைக் கடைப் பிடிக்க வேண்டும்.

''பகிரங்கமாக''க் காட்டுவதைச் ''சூசகமாக''க் காட்டலாம் என்பது ஒரு சிலரது கொள்கை. உண்மையில் ''சூசகமாக''க் கோடிட்டுக் காட்டுவது இளைஞர்களே மேலும் கெடுக்கிறது. சிறு ''சலனம்'' அல்லது ''சபலம்'' உண்டாக்கக்கூடிய எந்தக் காட்சியும் வசனமும் சினிமாவில் இடம் பெறலாகாது. — ராதாராமன், நெய்வேலி-3

**பெ**ண்ணேப் பலவந்தமாகக் கற்பழிக்கும் காட்சியில் ஆடவன் முரடனுக, மூர்க்கனுகத்தானே இயங்க வேண்டும்? அதுதானே — யதார்த்த நிலே? ரியலிசம்?

சிவப்பு விளக்குப் பகுதிப் பெண் இழுத்துப் போர்த்திக் கொண்டா நிற்பாள்?

'நியூவேவ்' இயக்குநர்களின் வாதங்கள் இவை போன்று பலப்பல உள்ளன.

போதாக் குறைக்குப் புதுமுக நடிகைகள் அவ்வப்போது 'பேட்டி' என்ற பெயரில் உதிர்க்கும் கருத்துக்கள் வேறு! ''கவர்ச்சியாக நடிப்பேன். ஆனால் ஆபாசமாக நடிக்க மாட்டேன்!'' என்ற அவர்களின் கருத்துரைகளின் பொருளை விளங்கிக் கொள்ள நாம் சிண்டைப் பிடித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

''அறையில் நடப்பதை அம்பலத்தில் நடப்பதாகக் காட்டினால் அது ஆபாசம். அறையில் நடப்பதை அறையில் நடப்பதாகவே காட்டினால் அது எப்படி ஆபாசம் ஆக முடியும்?'' என்ற ஒரு கேள்வியைக் கேட்டு ரசிகர்களைத் திக்குமுக்காடச் செய்தார் சில ஆண்டுகளுக்கு முன்பாகத் திரைப்படக் கதாசிரியரும், எழுத்தாளருமான ஒருவர்!... இன்றைய திரைப்படங்கள் அறையில் நடப்பதை அறையில் நடப்பதாகத்தான் காட்டுகின்றன. ஒப்புக் கொள்கிறோம். ஆனால், அறையில் நடப்பதாகக் காட்டப்படும் அக்காட்சிகள் அம்பலத்தில்தானே திரையில் காட்டப்படுகின்றன?

திரு காசிலிங்கம் இயக்கிய அறிஞர் அண்ணாவின் 'சொர்க்கவாசல்'லிலும் தான் கற்பழிப்புக் காட்சி வந்திருக்கிறது. துகில் உரியும் காட்சியா அது? கற்பினைப் பறி கொடுத்த பிறகு கதாநாயகி வந்து அமர்கிறாள். அருகிலுள்ள தடாகத்தின் தெளிந்த நீரில் அவள் உருவத்தைப் பார்க்கிறாள்! 'தூ!' என்று தன் பிம்பத்தின் மீது உமிழுகிறாள்! இதைப் போல் ஆயிரம் உத்திகள் தேவையா நம் இயக்குநர்களுக்கு? கேளுங்கள் கொடுக்கப்படும்.

ஆபாசம் என்பதற்கு நான் தரும் விளக்கம் இதுதான்! எது தெளிந்த மனத்தைக் கலக்குகிறதோ, எது 'செக்ஸ்' காட்சியில் மானசீகமாகத் தன்னையிணைத்து மகிழ்ந்து கிறங்கும் நிலையைப் பார்ப்பவருக்கு ஏற்றி விடுகிறதோ அது ஆபாசம்! காட்சியோ, கதையமைப்போ, உரையாடலோ, பாடலோ, பின்னணி ஒலியோ எதுவாக இருந்தாலும் சரி!

திரைப்படத்தில் தூய்மை எந்த அளவுக்கு வேண்டும்? தாயுடனும் திருமணமாகாத தங்கையுடனும் தியேட்டரில் இளைஞன் ஒருவன் அமர்ந்து அமைதியாக வெட்கம், வேதனை இல்லாமல் பார்த்து ரசிக்கும் அளவிற்குத் திரைப்படத்தில் தூய்மை வேண்டும்!

—சுந்ததாசன்

பாலுணர்வு இன்றைய நேற்றைய நினைவுகள் அல்ல... 'ஆதம் ஏவ்' காலத்தின் சொத்துக்கள் அவை! ஆனால்... அதனைக் கையாள்வதில்தான் 'கணக்கு' இருத்தல் வேண்டும்.

நமது பலவீனங்களைத் தெரிந்து... அந்தக் களிப்பில் விழும் அடியாக... 'கவர்ச்சியால்' நம்மைத் தாக்குவது எத்தனை கொடுமையானது?

'ஆத்மா'வின் வல்லமைகளைச் சுட்டிக்காட்டத் திரைப்படம் எடுக்கட்டுமே!

காந்தியை உருவாக்கிய 'அரிச்சந்திரனை' -- நினைவு கூர - மறந்துவிடக் கூடாது.

'ரவிக்கை'யைப் பிடுங்கி எறியும் ராட்சதத் திருப்பங்கள்....

இவர்கள் சொல்கிறார்கள். ''சோதனை செய்கிறோம். யதார்த்தமாகத் தொகுக்கிறோம்'' என்று. இவர்களது வெற்றியெல்லாம் --

பெண்களைத் துகில் உரித்துக் காட்டும் துச்சாதன சாதனையோடு சரி! - சென்னை வெங்கட்ராமன்

கலை, மனிதனுள் மறைந்துறைந்துள்ள 'மானுடத் தன்மை'யை வெளிப்படுத்திச் செப்பனிடும் சாதனமாயிருக்க வேண்டுமே தவிர, மனித மனமெல்லாம் கூத்தாடும் மிருகத்தனத்திற்குக் கள் ஊற்றும் கயமைக் கருவியாகி விடலாகாது! அதைத்தான் ரஸ்கின், "Art should be purposeful and didactic" எனச் சொன்னார்.

அடிமை, அறியாமை இருட்காட்டில், சுரண்டல் ஆபாசச் சகதியில் சிக்கி உழலும் பரந்து பட்ட மக்களைக் கரையேற்றும் பொறுப்புணர்வும் சமுதாயக் கடமையும் கலை—இலக்கியவாதிக்குத் தேவை!

இவ்விஷயத்தில் நம் நாட்டில் ஒரு புதிய சகாப்தம்மலர்ந்துள்ளது வரவேற்கத்தக்கதே!

காமச் சிலேடைப் பாடல்களும், இரு பொருள் வசனங்களும் ஆபாசக் காமக் களியாட்டங்களும் டிஷ்யூம் சண்டைகளும் காட்டிப் பணம் பண்ணுவோர் மத்தியில் ரேயும், சென்னும், பெனகலும் பாலை நடுச் சோலையாய் நம்பிக்கையூட்டுகின்றனர்.

ஷியாம் பெனகல் தமது 'அங்குர்' படத்தில் என்ன அழகாக 'இந்தியாவின் ஆத்மா'வான கிராமங்களின் அவலங்களைப் படம் பிடித்திருந்தார்.

அதில், இறுதிக் காட்சியில் நிலப்பிரபு வீட்டுச் சன்னலில் ஒரு சிறுவன் கல்லெறிந்து செல்வதாய், ஆதிக்க எதிர்ப்புணர்ச்சியை 'சிம்பாலிக்'காக உணர்த்தியிருப்பது ... என்ன நயம்!

அதேபோல் 'நிஷாந்த்'தில் கடைசிக் காட்சியில் கர்ப்பக்கிருகத்தின் அருகில், நாளை உலகின் நம்பிக்கை மலர்களான அந்த இன்றைய அரும்புகளைக் காட்டுவதன் மூலம் பெனகலின் தெளிவான சமூகப் பிரக்ஞை உணர்த்தப்படுகிறது; உணரப்படுகிறது.

பொங்கியெழுகிற மக்கள் வெள்ளத்தின் முன் துப்பாக்கி வாய்கள் ஊமைகளாகி விடுமென்பதைத் தத்ரூபமாக்கியுள்ளார், பெனகல்.

''புரட்சி, பொதுமக்களின் திருவிழா'' என்றார் லெனின். இங்கோ, பொதுமக்கள் ஒரு திருவிழாவிலேயே புரட்சியை வெடிக்கச் செய்வதைக் காண்கிறோம்.

பெனகல் பொறுப்புணர்ச்சியை மறந்து சில காட்சிகளை நிஷாந்தில் எடுத்திருக்கிறார் என்பதை மறுப்பதற்கில்லை. என்றாலும் கலையம்சம் இறுக்கமாய் இழையோடும் இந்த யதார்த்த ஓவியம் போன்றவை இருளடைந்த இந்தியத் திரைவானில் ஒளியூட்டும் நம்பிக்கை நட்சத்திரங்கள்.

தமிழ்த் திரைவானில் இந்த ஒளி தோன்றும் நாள் எந்நாளோ?...

சென்னை-5 —கவிஞர் முத்துராமலிங்கம்

○ விவாத மேடைக்கு வந்த ஏராளமான கடிதங்களில் மிகப் பெரும்பாலானவை திரைப்படத் தூய்மை அவசியம் என்பதையே வலியுறுத்தின. — ஆர்.

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...




# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம். வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலாரத் தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு: ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

## அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
## நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

கல்கி
மலர் 35
இதழ் 38



# பெருமை தரும் பிரதமர்!

ஜனநாயகத்தின் தாயகமாகிய பிரிட்டனில் தவிர வேறு ஒரு தேசத்தில் இப்படி ஓர் அற்புதம் நிகழ முடியாது.

பதவி ஆசை, மோகம் எல்லாம் கொண்டு இறுதிக் கட்டம் வரை ஒட்டிக் கொண்டிருக்கிற போக்கையே உலக முழுவதும் நாம் காணும்போது பிரதமர் வில்சன் தாமாகவே பிரதமர் பதவியைத் துறந்தார்.

பிரிட்டன் பொருளாதார ரீதியில் ஒரு நெருக்கடியான கட்டத்தில் இருக்கிறது. ஸ்டெர்லிங் மதிப்புக் குறைந்து, பணவீக்கம் அதிகரித்து, வேலையில்லாத் திண்டாட்டமும் பெருகியுள்ளது. இவற்றைச் சமாளிக்க வில்ஸன் முயற்சி எடுக்காமல் இல்லை. தம் ஆற்றலையெல்லாம் பிரயோகித்தும் கணிசமான பலன்கிட்டாது போகவே அவர் கௌரவமாக விலகிக் கொண்டார்.

'ஒரு சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டுவன வெல்லாம் செய்திருந்த போதிலும், புதிய சிந்தனை, செயல் திறன் இன்னும் அதிகமாகச் சாதித்திருக்கலாமோ என்ற சந்தேகம் பின்னால் ஒரு கட்டத்தில் எழ வாய்ப்பளிக்க வேண்டாம் என்பதால் இந்த முடிவுக்கு வந்தேன்' என்பதாக அவர் கூறியுள்ளார்.

மெய்யான ஜனநாயகவாதிகள் இவ்வாறுதான் சிந்திப்பார்கள். தன்னை விட்டால் தேசமே குட்டிச்சுவராகப் போய்விடும் என்று கருத மாட்டார்கள். மற்றவர்களுக்கும் வாய்ப்புத் தரவே விரும்புவார்கள்.

வில்ஸன் அவர்கள் பதவி விட்டு விலகி வந்த கண்ணியத்தை, ராஜாஜி பல முறை அங்கவஸ்திரத்தைக் கழற்றிப் போடுவது போல் பதவிகளைத் துறந்துவிட்டு வந்ததற்குத்தான் ஒப்பிடலாம்.

வில்ஸன் விலகிக் கொண்டாலும் அவரது தொழிற் கட்சியே நாடாளும் மன்றத்தில் பெரும்பான்மை பலம் பெற்றிருந்தது. எனவே தொழிற் கட்சியில் புதிய தலைவருக்கான தேர்தல் நடந்தது. ஏகமனதாக ஒருவரைத் தேர்ந்தெடுக்குமாறு யாரும் யாரையும் வற்புறுத்தவில்லை. தலைமைப் பதவி ஒருவர் மீது திணிக்கப்பட்டு மற்றவர் அவரை ஏற்றேயாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவில்லை. ஜனநாயக மரபுகள் பழுதின்றி இயங்கின.

போட்டி இருந்தது; ஆரோக்கியமான போட்டி. தேர்தல் நடந்தது. ஆரம்பத்தில் யாருக்கும் பெரும்பான்மை வாக்குகள் கிடைக்காதபோது மறு தேர்தல்கள் நடத்தினார்கள். போட்டியிட்டவர்களில் ஒருவருக்குப் பெரும்பான்மை வோட்டுக்கள் கிடைக்கும்வரை மூன்று முறை தேர்தல் நடந்தது. கண்ணியமாக அமைதியான முறையில் கொள்கைகளின் அடிப்படையில் விவாதங்களை நடத்திப் பலம் சேர்த்தார்கள். ஆனால் திரு கல்லாகன் தமக்கு வோட்டுப் போடுமாறு தாமே யாரையும் போய்ப் பார்த்துக் கேட்கவே இல்லை. தனிப்பட்ட முறையில் தாக்குவது என்ற பேச்சுக்கே இடமேயில்லை.

கடைசியில் ஜேம்ஸ் கல்லாகன் தம்மை எதிர்த்த மைக்கேல் ஃபுட் அவர்களைவிட முப்பத்தொன்பது வோட்டுக்கள் அதிகம் பெற்றுப் பிரதமரானார்.

பிரிட்டனில் தொழிற்கட்சி பல சந்தர்ப்பங்களில் ஆட்சியில் இருந்திருக்கிறது என்றாலும் உழைப்பாளர் வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவரே பிரதமராவது இதுதான் முதல் தடவை. இதில் பிரிட்டிஷ் மக்களுக்கு ரொம்பப் பெருமை. இதற்கு முன்பு இருந்த தொழிற் கட்சிப் பிரதமர்கள் மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகவோ அல்லது பல்கலைக் கழகங்கள் உருவாக்கிய பேரறிஞர்களாகவோ விளங்கினார்கள்.

கல்லாகன் பள்ளிப் படிப்பு மட்டுமே முடித்தார். அவர் தகப்பனார் காலமானபோது இவருக்கு வயது ஒன்பது. வாழ்க்கையில் அடிபட்டும் மிதிபட்டும் மனம் தளராது முன்னுக்கு வந்தவர். சுய



வில்ஸன் - கல்லாகன்

முயற்சியில் ஏராளமாகப் படித்து ஞானம் பெற்றவர். தொழிலாளர் தலைவராகத் தொடங்கி நாளடைவில் பெரிய பதவிகளை வகித்தவர். அமைச்சரவையில் நிதி அமைச்சராகவும், உள்துறை அமைச்சராகவும், அயல்நாட்டு அமைச்சராகவும் திறம்படப் பணியாற்றி அனுபவம் பெற்றவர்.

பிரிட்டனைத் தற்போது எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் சூரியனைக் கண்ட பனிபோல் விலகக் கல்லாகனின் யதார்த்தப் போக்கும் அனுபவ அறிவும் உதவட்டும்.

புதிய பிரதமருக்கும் பிரிட்டிஷ் மக்களுக்கும் அவர்களது ஜனநாயக உணர்வுக்கும் நமது வாழ்த்துக்கள்.

# என்ன சேதி?

## அகில உலக ஹிந்தி!

ஹிந்தியைப் பாரத நாட்டில் பரப்ப முயன்று ஹிந்தி ஆதரவாளர்களுக்கு அலுத்து விட்டது! இப்போது தேசத்தின் எல்லைகளுக்கு அப்பால் வேறு பல நாடுகளில் அதனைப் பரப்புவது என்று சங்கல்பம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஜெர்மானிய, பிரெஞ்சு, இத்தாலிய, செக், ஹங்கேரிய, ருமேனிய, ருஷிய, மங்கோலிய, ஜப்பானிய, புஷ்டு, பெர்ஷிய, அராபிக், ஸ்பானிஷ் ஆகிய மொழி பேசும் மக்களோடு தொடர்பு கொள்வது இப்போது சிரமமாக இருக்கிறதாம். எனவே, இம்மொழிகளில் விளக்கங்களுடன் ஹிந்தி மொழி பயிற்சி நூல்கள், அகராதிகள், வழிகாட்டிகள், இலக்கண நூல்கள் இத்தியாதி தயாராகின்றன.

மேற்கூறிய மொழிகள் பேசப்படும் நாடுகளுக்கு ஹிந்தி திக்விஜயம் செய்யப் போகிறது. அதற்கு முன்பாக ஹிந்தி பண்டிதர்கள் போயிங்கில் பறக்கப் போகிறார்கள்; இவற்றுக்கெல்லாம் மத்திய அரசு கோடிக் கணக்கில் செலவழிக்கப் போகிறது.

ஹிந்தி அகில உலகத் தொடர்பு மொழியாகும் நாள் அதிக தூரத்தில் இல்லை! ஆங்கிலம் தலைகுனிந்து உலக அரங்கிலிருந்து வெளியேறப் போகிறது! பார்த்துக் கொண்டே இருங்கள்.

## இணக்கம், கணக்கும் புரிய...

பாலிவாலா அடிக்கடி வாய் திறக்க மாட்டார். திறந்தால் அருமையான கருத்தை உதிர்க்காமல் இருக்கவும் மாட்டார். சமீபத்திய பட்ஜெட்டை இன்னின்ன காரணங்களுக்காக வரவேற்கிறேன் என்று சில தினங்களுக்கு முன்பு கூறிய அவர் இப்போது அரசியல் சாசன மாற்றங்கள் குறித்துப் பேசியுள்ளார். இது விஷயமாக மக்களிடையே விவாதம் நிகழட்டும் என்று பிரதமர் கூறியதால் அவரவரும் தலைக்குத் தலை ஏதேதோ சொல்லி வருகிறார்கள். எல்லாவற்றையும் கேட்டுவிட்டு அரசு ஏதோ ஒரு முடிவுக்கு வருவதைவிட அரசு இன்ன மாற்றங்களைச் செய்ய உத்தேசித்துள்ளோம் என்று முதலில் கூறிப் பிறகு அதன் மீது பரவலாக விவாதம் நடக்க அனுமதிப்பது நல்லது. அதிலிருந்து மக்களின் இணக்கம் அல்லது கணக்கம் புரிந்து போகும் என்று கூறியுள்ளார். இதுவே ஜனநாயக மரபு, பண்பு எல்லாம்.

ராஜாஜி சிந்தனை

## எலிப் பொறியில் நாம்!

இன்று புதிதாக ஒரு நட்சத்திரத்தைப் பார்த்தால் நாம் பார்ப்பது அதன் இன்றையத் தோற்றமன்று; இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் புத்தர் பிறப்பதற்கு முன்புள்ள தோற்றமாகும். அன்று புறப்பட்ட ஒளி இன்றுதான் நம் கண்களுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. அதற்கிடையில் எத்தனையோ காரியங்கள் இந்தியா தேசத்தில் நடந்துவிட்டன. அது வெகு விரைவாகச் செல்லும் ரயில் வண்டியைவிட 120 லட்சம் மடங்கு அதிக வேகமாய் ஓடிவந்தும் இப்பொழுதுதான் நம்மிடம் வந்து எட்டியிருக்கிறது. அதைச் சிறிது யோசித்துப் பாருங்கள்.

ஆகவே நாம் வசிக்கும் இந்த உலகமும் அதில் வாழும் நம்முடைய சிற்றுயிர்களும் எத்துணை அற்பமானவை? எலியைப் பிடிக்கப் பொறி வைக்கிறோம். அதனுள் பல எலிகள் சேர்ந்து அகப்பட்டுக் கொள்கின்றன. அங்குள்ள வெங்காயத்தைத் தின்ன விளையாடவும் சண்டையிடவும் செய்கின்றன. அவற்றுள் சில மகிழ்கின்றன; சில வருந்துகின்றன. இதுபோல்தான் நாமும் நம்முடைய பூமியும்.

—நட்சத்திரமும் அணுவும் என்ற கட்டுரையில்

வில்சன்
ராஜினாமா
அப்பழுக்கற்ற
பிரிட்டிஷ்
ஜனநாயகம்
கல்லகன்
ஸாரி துனியா மே ஹிந்தி கோ ஸப் ஸே படா பாஷா பனானே கேலியே மைம் ஆ ரஹா ஹூம்!
ஹிந்திப் பிரசாரகர்
நோ.. ஐ ஆம் ஸக்ஸஸ்ஃபுல்லி ரிட்டர்னிங் ஆஃப்டர் மேக்கிங் ஹிந்தி எ பவர்ஃபுல் லாங்வேஜ் இன் தி ப்ளேஸ் ஆஃப் இங்கிலீஷ் இன் வேர்ல்டு கண்ட்ரீஸ்!
ஹிந்திப் பிரசாரகர்
இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பாரிலானும் கெடும்.
வள்ளுவர்
கோட்டம்
ஆக்கபூர்வமான விமர்சனங்களை
அரசு வரவேற்கிறது— பிரதமர்

# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள்
# பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்


மேக்-அப்பை சீராக்குகிறது. அல்லது நீக்க உதவுகிறது.


நுட்பமான ஹை-பை சாதனங்களை சுத்தம் செய்கிறது.


குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்றாக, மென்மையாக.


சிறிய காயங்களின் மீது மருந்தை ஒற்றி எடுக்க உதவுகிறது.


காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது-குழந்தையின் காதுகளையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது.**
**சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது!
வளையக்கூடிய
பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம்**
**செய்வீர்- ஜான்ஸன்ஸ்**
**Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

# வேதமதத்தின் விசேஷ அம்சங்கள்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

ஒரு ஸ்டுடியோவில் படம் எடுக்கிற இடத்தில் நிறைய வெளிச்சம் இருக்க வேண்டியிருக்கிறது; அதே ஃபோட்டோவைக் கழுவுகிற இடம் இருட்டாகத்தான் இருக்கவேண்டும். இப்படியே ஒவ்வொருவருடைய தொழிலையும் பொறுத்து அவரவருக்கான நியமங்கள், அவர்கள் இருக்க வேண்டிய சூழ்நிலை இவை ஏற்படுகின்றன. சாஸ்திரத்தை ரக்ஷிக்கிறவன் சைவ போஜனமும், உபவாஸமுமாக இருக்க வேண்டும். மிலிடரிக்காரன் சரீர புஷ்டியை வளர்த்துக் கொள்வதற்கான ஆகாராதிகளைச் சாப்பிட வேண்டும். 'ஒற்றுமை' என்று சொல்லிக் கொண்டு இவனும் அவனும் கலந்து வாழ்க்கை நடத்தினால் ஒருத்தன் ஆகாரத்தை இன்னொருத்தனுக்கும் அநுசரிக்கத் தோன்றத்தான் செய்யும். மிலிடரிக்காரன் பட்டினி கிடக்க ஆரம்பித்தால் அவன் காரியம் கெட்டுத்தான் போகும். சாஸ்திரிகள் மாம்ஸ போஜனம் செய்தால் அப்புறம் திவ்ய சக்திகளை லோகத்துக்குத் திருப்பிவிட அவரால் ஆகாது. அவனவனால் சமூக க்ஷேமத்துக்காக — பொது நலனுக்காக— ஏற்பட வேண்டிய காரியத்துக்கே ஹானி உண்டாகத்தான் செய்யும்.

இதனாலெல்லாம்தான் வெளிப் பார்வைக்குச் சமூகத்தை அக்ரஹாரம், பண்டார வாடை, குடித்தெரு என்றெல்லாம் பிரித்திருந்தார்கள். வெளியிலே பிரிவு இருந்தாலும் உள்ளே சகல ஜனங்களின் மனசும் அன்பிலே சேர்ந்து ஐக்கியமாகத்தான் இருந்தது. இதற்குக் காரணம் எல்லோருக்கும் பொதுவான மதம் — ஈசுவர பக்தி.

ஊருக்கே பொதுவான ஆலயமும், அதன் உத்ஸவாதிகளும் சகல ஜனங்களையும் ஒன்றாகச் சேர்த்து வைத்திருந்தது. வெளியிலே சமத்துவப் பேச்சு ஏகமாக வந்துவிட்ட பிறகுதான் நமக்குள் ஏகப்பட்ட பேதமும் துவேஷமும் வந்திருக்கின்றன. வெளியிலே பேதம் மாதிரி இருந்தபோது எல்லோர் மனசும் ஐக்கியமாகத்தான் இருந்திருக்கிறது.

ஒரு பெரிய சமூகத்தைக் கட்டுப்பாட்டில் வைப்பது கஷ்டம். அதையே சின்னச் சின்ன சமூகமாகப் பிரித்து, அந்தந்த ஜாதி நாட்டாண்மையால் சுலபமாகக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். இந்த நாட்டாண்மை இருக்கிற வரையில் தேசத்தில் இருந்த ஒழுக்கமும் சீலமும் இன்றைக்கு நிச்சயம் இல்லை. இன்றைக்கு எத்தனை போலீசும், கோர்ட்டும் வைத்தாலும் குற்றங்கள் ஜாஸ்தியாகிக் கொண்டுதான் வருகின்றன. ஏனென்றால் இது வெளியிலிருந்து செய்கின்ற நிர்ப்பந்தமாக இருக்கிறது. ஆனால் ஒவ்வொரு சமூகத்துக்கும் தங்கள் சொந்த நாட்டாண்மை என்று ஒன்று இருந்தபோது அதிலே சகஜமாக ஓர் ஒட்டுதல், அபிமானம் இருந்து, அதற்கு மனப்பூர்வமாகக் கட்டுப்பட்டார்கள். குற்றங்களும் குறைச்சலாக இருந்தன.

எடுத்த எடுப்பில் சமூகம் முழுவதையும் ஒரே கட்டில் கொண்டு வர முடியாது போனாலும், இப்படிச் சின்னச் சின்ன கட்டுக்களாக நன்றாக, பிகுவாகப் போட முடிந்த பின் இத்தனை கட்டுக்களையும் சேர்த்து, மதத்தால் தெய்வ பக்தியால், சமூகம் முழுவதையும் ஒரு பெரிய கட்டில் போட்டுவைக்க முடிந்தது. சுள்ளி பொறுக்குகிற சாமானிய ஜனங்களைக் கேட்டால் இந்தப் பெரிய தத்துவம் புரிந்துவிடும். அவர்கள் நிறையச் சுள்ளிகளை அப்படியே ஒட்டுமொத்தமாகக் கட்டிவிட மாட்டார்கள். ஏனென்றால் இலேசிலே அப்படி விரைப்பாகக் கட்ட முடியாது. கட்டினாலும் சுலபத்தில் தொள தொளத்துப் போகும். ஒரு சுள்ளி கொஞ்சம் ஆட்டம் கண்டு விழுந்தாலும் அப்புறம் இன்னொன்று, மேலும் ஒன்று என்று சரிந்து, கட்டே பிரயோஜனமில்லாமல் ஆகிவிடும். அதனால் முதலில் சின்னச் சின்னக் கட்டுக்களாக நல்ல விரைப்போடு கட்டி அப்புறம் எல்லாவற்றையும் சேர்த்து ஒரு பெரிய கட்டாக முடிவார்கள். இதுதான் வர்ண தர்மக் கட்டுப்பாடு. இந்தக் கட்டுப்பாட்டினால் ஏற்பட்ட ஸ்திரத் தன்மை



## அன்புப் போட்டி!

புகழ் பெற்ற நகைச்சுவை நடிகர் சார்லி சாப்ளின் ஒரு நாள் வீட்டுக்கு வந்து சட்டையைக் கழற்றிப் பார்த்ததில், பையில் ஒரு தங்கக் கடிகாரம் இருந்தது. அதைப் போலீசுக்கு அனுப்பி விசாரித்தும் கடிகாரம் யாருடையது என்பது தெரியவில்லை. இந்தச் செய்தி பத்திரிகைகளில் வெளியாயிற்று.

சில நாட்களுக்குப் பிறகு சாப்ளினுக்கு இப்படியொரு கடிதம் வந்தது: ''நான் ஒரு தங்கக் கடிகாரத்தைத் திருடிக் கொண்டு வருகையில் எதிர்பாராதவிதமாக உங்களைச் சந்தித்தேன். உங்கள் மேல் எனக்குள்ள அளவு கடந்த பற்றுதல் காரணமாக உங்கள் பையில் அக்கடிகாரத்தைப் போட்டுவிட்டேன். ஏற்றுக் கொள்ளவும்.''

இந்தச் செய்தியும் பத்திரிகைகளில் பிரசுரமாயிற்று. சில நாட்களில் அந்தத் தங்கக் கடிகாரத்துக்குச் சொந்தக்காரர் பின்வருமாறு சாப்ளினுக்கு எழுதினார்: ''கடிகாரம் என்னுடையதுதான். அதை என்னிடமிருந்து திருடியவனை விட எனக்குத்தான் உங்கள் மீது அபார அன்பு. ஆகவே, தாங்கள் எனது தங்கக் கடிகாரத்துடன் இப்பொழுது அனுப்பியுள்ள தங்கச் செயினையும் வைத்துக் கொள்ளுங்கள்.'' ஆதாரம் : ''சுவையான நிகழ்ச்சிகள்''

என்ற புத்தகம் — ஆர். வெங்கடராமன்

## டில்லியில் நடந்தது!



சென்னையில் அண்மையில் எக்ஸ்பிரஸ் பஸ் கட்டண உயர்வு பற்றிய அதிருப்தியைத் தெரியப்படுத்த இரண்டு நாட்கள் அதில் பயணிகளே ஏறாமல் காலியாக ஓடச் செய்தனர். இதே போல் தில்லியில் ஒரு சுவையான நிகழ்ச்சி. 'உத்தர்-ராம்-சரித்' என்று ஒரு தெய்வீக நாடகம். அதன் தயாரிப்பாளருக்கு அவர் எதிர்பார்த்த தமாஷா வரி விலக்கு உத்தரவு இலேசில் கிடைக்கவில்லை. உடனே ஒரு புரட்சி செய்தார். மூன்று காட்சிகள் அந்த நாடகத்தைப் போட்டார். டிக்கட் இல்லை; யாரும் வந்து பார்க்கலாம். உடனே அலறி அடித்துக் கொண்டு வந்தது தமாஷா வரி விலக்கு உத்தரவு.

-- யூத் டைம்ஸ் -- சாமி

---

(Stability) தான் பாரத நாகரிகத்தை மட்டும் பல்லாயிரம் காலமாகப் பாறாங்கல் மாதிரி உறுதியாக வாழ வைத்திருக்கிறது.

ஜன சமுதாயம் ஒழுங்காக நடப்பதற்காகச் செய்ய வேண்டியிருக்கிற பல தினுசான காரியங்களையும் பங்கீடு செய்வதை division of labour என்று பொருளாதார சாஸ்திரத்தில் பெரிதாகச் சொல்கிறார்கள்; ஆனாலும் மற்ற தேசங்களில் இந்தப் பங்கீட்டுக்கு வழி தெரியவில்லை. இந்தியாவில் பாரம்பரியமாக இப்படிப் பங்கீடு பண்ணிவிட்டதால் ஒரு காலத்துக்கு மட்டுமல்லாமல், சாசுவதமாகச் சமூக காரியங்களை நிரவிக் கொடுக்கிற ஏற்பாடு நடைமுறையில் நடந்து வந்திருக்கிறது. பிறக்கிறபோதே தன் ஜீவனோபாயத்துக்கு இதோ ஒரு தொழில் இருக்கிறது என்ற நிச்சயம் இருந்தது. அதனால், ''வேலையில்லாத் திண்டாட்டம்'' என்ற வார்த்தைக்கே இடமில்லாமலிருந்தது. எவனுமே மற்றவன் பார்த்துப் பொறாமைப் படுகிற மாதிரியான டாம்பீகங்கள் இல்லாமல் எளிய வாழ்க்கை நடத்தியதால், அவனவனும் தன் தொழிலே தனக்குப் பூஜை, அதுவே தன் ஸ்வாமி என்று திருப்தியோடு செய்து வந்தான். இந்த ஸந்துஷ்டிச் சூழ்நிலை இருந்ததால்தான் சகல ஜாதிகளிலும் மகா பெரியவர்கள் ஒவ்வொரு தலைமுறையிலும் தோன்றி, நம்முடைய மகோன்னதமான நாகரிகத்தை உண்டாக்கினார்கள்.

இப்போது மெடீரியலிஸம் (லௌகிக நாட்டம்) ரொம்பவும் ஜாஸ்தியாகி எல்லோரும் பணம், பணம் என்று பறப்பதும், போக்கிய சாதனங்களுக்கு (luxuries) ஆசைப்படுவதும்தான் தொழில் போட்டி, பொறாமை எல்லாவற்றிலும் கொண்டு விட்டிருக்கிறது. காந்தி சொன்ன மாதிரி பரம எளிய வாழ்க்கையே நடத்துவது என்று ஆகிவிட்டால் அப்புறம் அவனவனும் தன் காரியத்தைச் செய்து கொண்டு, போன நூற்றாண்டு வரை நம் தேச ஜனங்கள் இருந்த மாதிரி நிம்மதியாக, விச்ராந்தியாக இருப்பதில் எந்தக் கஷ்டமும் இல்லை. இப்போது வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது என்று தப்பாகச் சொல்லி ''ப்ளான்''கள் போட்டு, ஆசைகளையும் தேவைகளையும் ஜாஸ்திப்படுத்திக் கொண்டே போவதால் ஆத்மாபிவிருத்தி போயே போய்விடும். அமெரிக்கா போன்ற மகா பணக்கார தேசங்கள் நமக்குப் பிரத்யட்சமாகக் காட்டுகிற பாடம் இதுதான். லோகத்துக்கே நம் தேசம் பெரிய கொடையாகக் கொடுத்து வந்திருக்கிற ஆத்ம சக்தியை இழந்து விடுவோம்.

வர்ண தர்மத்தைப் பழையபடி ஏற்படுத்த நம்மால் முடிகிறதோ, முடியவில்லையோ, ''அந்த ஏற்பாடே பொல்லாதது'' என்று நினைக்கக் கூடாது என்பதற்கே இத்தனையும் சொல்கிறேன். உசந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி என்றெல்லாம் யாராவது நினைத்திருந்தால் அது ரொம்பவும் தப்பு. உள்ளபடி வைதிக தர்மத்தைப் பார்த்தால் இந்த உசத்தி-தாழ்த்திக்கு இடமே இல்லை. சநாதன தர்மத்தில் இல்லாத இந்தத் தார தம்மியம்தான் அதன் சாரம் என்று நினைத்து, வர்ண தர்மத்தையே கரித்துக் கொட்டுவது ரொம்பப் பிசகு என்பதையாவது நீங்கள் புரிந்து கொண்டால் போதும்.

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

# விலையை ஒப்பிடுக.
# தரத்தை சோதித்திடுக.

## பாய்ண்ட்

தரமான டிட்டர்ஜண்ட்
சலவைப் பவுடர்

Point
DETERGENT WASHING POWDER
for sparkling white and brilliant colour washes

Point
Net Weight 750 gms
for sparkling white and brilliant colour washes

மைசூர் சந்தன சோப் தயாரிப்பாளர் அளிப்பது

MCA/PD/4



பெங்களூர் அரசினர் சோப்பு
தொழிற்சாலையின் ஒரு தரமான தயாரிப்பு

மக்களுக்கான

ஒரு முதலீடு திட்டம்!




இன்று ரூ 603.00 செலுத்தி. ரூ 1000/- பெறுங்கள்
61 மாதங்கள் கழித்து

இன்று ரூ 60.30 செலுத்தி. ரூ 100/- பெறுங்கள்
61 மாதங்கள் கழித்து

## லக்ஷ்மி விலாஸ் பேங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்
693, ஜவஹர் கடைத் தெரு
கரூர் 639 001

நிர்வாக அலுவலகம்
1, பைகிராஃப்ட்ஸ் கார்டன் தெரு
சென்னை 600 006

D. வர்த்தமானன்
சேர்மன்

LVB- மக்களுக்கான பேங்க்

KRIPANA -LVB-124

# அரும்பு அம்புகள்

அமரர் **கல்கி**

## புதையல் கிடைத்தது!

என் வீட்டில் சோதனை நடந்தது! ஏக அமர்க்களம்!

அமரர் கல்கி அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைத் திரு சுந்தா எழுதத் தொடங்கிய போது என் தகப்பனார் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் கொண்டு வந்து தருமாறு கோரினார்.

அவ்வளவுதான். பலமாகச் சோதனை நடத்தினேன். சுவர்களில் ஏதாவது ரகசிய அறைகள் உள்ளனவா என்று கூடத் தட்டிக் கொட்டிப் பார்த்தேன். தோட்டத்தைக் கொத்தியதில் எடை சற்றுக் குறைந்தது!

அலமாரிகள், மேஜை இழுப்பறைகள் எல்லாவற்றையும் குடைந்து பார்த்ததில் புத்தகங்கள், குறிப்புக்கள், கடிதங்கள், புகைப்படங்கள், நாளிதழ் செய்தித் தொகுப்புக்கள் என்று பலப்பல கிடைத்தன. அவற்றுடன் ஒரு புதையலும் அகப்பட்டது! சோதனை மாபெரும் வெற்றி!

திரைப்படம் ஒன்றுக்காக அமரர் கல்கி அவர்கள் தமது இரு சிறுகதைகளை இணைத்து நாவல் உருக்கொடுத்து எழுதியிருந்த மூன்று நோட்டுப் புத்தகங்களே அந்தப் புதையல். முதலில் நாற்பது பக்கங்களில் எழுதிய கதையை இரண்டாவது முறையாக மேலும் விரிவுபடுத்தி 186 பக்கங்களில் வளர்த்திருந்தார்.

அதைக் கண்டதும் படித்ததும் ஏற்பட்ட மகிழ்ச்சியைக் கல்கி நேயர்களுடன் பகிர்ந்து கொள்ளும் விதமாகக் கதையைத் தொடர்ந்து எழுதி வருகிறேன்.

இந்த நாவல் உங்களுக்கு அளிக்கப் போகிற ஆனந்தத்துக்குக் கல்கியை வாழ்த்துங்கள். குறைகள் ஏதும் தென்பட்டால் அது என்னைச் சேர்ந்தது; மன்னித்து விடுங்கள்.

கி. ராஜேந்திரன்
இணை ஆசிரியர், கல்கி

# அத்தியாயம் 1

# கமலாவின் மனோரதம்

"இப்படிப் பயந்து ஓடுவது எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை" என்றாள் கமலா. "என் மனசை இந்தப் பஸ்கூடப் புரிந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் இப்படி நடு வழியில் நின்று நகராறு பண்ணுகிறது."

"இந்தா! கமலா, வாயைக் காட்டாதே, அடங்கி இரு" என்று அதட்டினாள் தாயார் காமாட்சி.

"எதற்குக் குழந்தையை அதட்டுகிறாய்? ஏதோ மனசில் பட்டதைச் சொல்கிறாள். விளக்கினால் புரிந்து கொள்கிறாள்" என்றார் மாசிலாமணி.

"நன்றாக விளக்குங்கள். ஆனால் துடைப்பக் கட்டையைத்தான் எடுத்து வரவில்லை. மற்றச் சாமான்களோடு அறையில் வைத்துப் பூட்டியாகிவிட்டது. அது சரி, ஏங்க, எல்லாச் சாமான்களும் பத்திரமாக இருக்கும் இல்லையா....?"

"சரிதான்" என்றாள் கமலா சிரித்துக் கொண்டே. "ஜப்பான்காரனுக்குப் பயந்து சென்னையைவிட்டு வெளியேறி வந்தோம். இப்போ திருடனுக்குப் பயந்து மறுபடியும் சென்னைக்கே போவோம். அங்கே எல்லாச் சாமான்களும் பத்திரமாக இருப்பதைத் தெரிந்துகொண்டு மறுபடியும் ஜப்பான்காரனுக்குப் பயந்துகொண்டு பஸ் ஏறுவோம். மறுபடியும்திருட்டுப்போகுமோ என்ற கவலையில்...."

"ஏண்டி, என்னைக் கிண்டலா பண்ணறே?" என்று தாயார் காமாட்சி கோபத்துடன் எழுந்தாள்.

"உஷ்! உட்காரு" என்று அவள் கையைப் பற்றி அமர்த்திய மாசிலாமணி, "கமலா! நாம் ஜப்பான்காரனுக்குப் பயந்து கொண்டு வெளியேறுவதாக நீ ஏன் நினைக்கிறாய்?" என்றார்.

"யுத்த முயற்சிகளுக்கு நாம் உதவுகிறோம், அவ்வளவுதான். ஜப்பான்காரன் வந்தால் பட்டினத்தைப் பாதுகாப்பது மிக முக்கியமான காரியமாகிவிடும். அப்போது போரில் உதவக்கூடியவர்கள் தவிர மற்றவர்கள் நகரத்தை விட்டு வெளியேறி விருப்பதுதான் அரசாங்கத்துக்கு வசதி. ஜப்பானிய விமானங்கள் வரும்போது அவற்றைச் சுட்டு வீழ்த்துவதா? அல்லது ஊரில் இருக்கிற கிழம் கட்டைகளைக் குண்டு வீச்சிலிருந்து காப்பாற்றிக் கொண்டிருப்பதா? அடிபட்ட சோல்ஜர்களுக்குச் சிகிச்சை செய்வதா? அல்லது பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் பாண்டேஜ் போட்டு அவர்கள் அழுகையைச் சமாதானப்படுத்திக் கொண்டிருப்பதா? அதனால்தான் அரசாங்கமே நகரைக் காலி செய்யுமாறு எல்லோரையும் கேட்டுக்கொண்டிருக்கிறது. யுத்த முயற்சிக்கு உதவ முடியாதவர்கள் முட்டுக்கட்டை போடாமல் இருப்பதே பெரிய உபகாரம் தான்!"

"அப்பா! நீங்கள் சொல்வது ரொம்ப நியாயம்! கிழம் கட்டைகள், குழந்தைகள் நகரைவிட்டு வெளியேற வேண்டியதுதான். ஆனால் என்னைப் போல் இளம் வயதுக்காரி உடம்பில் சக்தி உள்ளவள் யுத்த முயற்சிகளில் பங்கெடுத்துக் கொண்டு உதவ வேண்டுமே தவிர ஒதுங்கிக் கொண்டா உதவுவது?"

"நீ என்னத்தைடி கிழிக்கப் போகிறாய்?" என்றாள் காமாட்சி.

"ஏன் கிழிக்கமாட்டேன்? வேறு எதுவும் இல்லையானால் பாண்டேஜ் துணியையாவது நுனியில் கிழிச்சுக் கட்டுப் போடுவேன். அடி-



பட்ட சோல்ஜர்களுக்கு நர்ஸாயிருந்து சேவை புரிவேன். ஏர் ரெய்ட் வார்டனாக இருந்து பணியாற்றுவேன். இன்னும் எத்தனையோ விதங்களில் உதவலாம். மனசு வைக்கணும், தைரியமும் இருக்கணும். அவ்வளவுதான்.''

''சிவ சிவா, வெள்ளைக்கார சோல்ஜர்களைத் தொட்டுக் கட்டுப் போடவா? புத்தி போகிறதே, உனக்கு!''

''வெள்ளைக்காரா மட்டும்தானா அம்மா? எத்தனையோ இந்திய சிப்பாய்கள் உயிரைத் திரணமாக மதித்து யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்களே. அவர்களுக்கு உதவிவிட்டுப் போகிறேன்.''

''கமலா! நீ சொல்வது ஒருவிதத்தில் சரிதான். ஆனால் ஒரு விஷயம் யோசித்துப் பார். நம்மை அடிமைப்படுத்தியிருக்கிற ஆட்சிக்கு நாம் ஏன் உதவி செய்ய வேண்டும்?'' என்றார் தந்தை மாசிலாமணி.

''உஷ்! மெள்ளப் பேசுங்க. பஸ் பிரயாணிகளிலேயே சி. ஐ. டி. யாராவது இருந்து வைக்கப் போகிறான்'' என்ற காமாட்சி அம்மாள், நாலாபுறமும் மிரள மிரளப் பார்வையைச் செலுத்தினாள்.

''அப்படி நீங்கள் நினைத்தால் எனக்கு ரொம்ப சந்தோஷம் அப்பா. இப்போது உத்தரவு கொடுங்கள். எப்படியாவது இந்த நாட்டைவிட்டுத் தப்பித்துக் கொண்டு போய் சுபாஷ்சந்திரபோஸ் படையிலே சேர்ந்துவிடுகிறேன். அவர் என்னைப் பட்டாளத்தில் சேர்த்துக் கொள்ளமாட்டேன் என்றால் கெஞ்சிக் கூத்தாடி நர்ஸாக ஊழியம் செய்யவாவது அனுமதி வாங்கிக் கொள்கிறேன்.''

காமாட்சி அம்மாள் இப்போது ஒரேயடியாகப் பயந்து போய்க் கமலாவின் வாயைத் தன் வலக் கரத்தினால் பொத்தினாள். ''காலம் கெட்டுக் கிடக்குடி. கதர்ச்சட்டை போட்டுக்கொண்டுகூட சி.ஐ.டி.கள் உலவி வருகிறார்களாம். ஊர் போய்ச் சேருகிற வரையில் ஒரு வார்த்தை பேசப்படாது நீ! புரிந்ததா? உம்!'' என்று ரகசியக் குரலில் மிரட்டினாள்.

''பேச வேண்டாம் என்றால் பேசாமல் இருந்துவிட்டுப் போகிறேன். ஆனால் நாம் பயந்துகொண்டுதான்



அழகில்லாத எதையும் கண்டால் ஆஸ்கார் ஒயில்டுக்குப் பிடிக்காது. கடிகாரக் கடையில் கண்ணாடி அலமாரியில் இருந்த கடிகாரத்தை எடுத்துத் தெருவில் எறிந்து உடைத்தார். கடைக்காரன் கோபமாக ஆஸ்காரை நோக்கினான். ஆனால், அவரோ சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்து உடைந்த கடிகாரத்தின் விலையைக் கேட்டு அதற்குரிய பணத்தைக் கொடுத்து விட்டார். ஆச்சரியத்துடன் பணத்தை வாங்கிக்கொண்ட கடைக்காரனைப் பார்த்து ஆஸ்கார் ஒயில்டு சொன்னார்:

''கடிகாரம் பார்க்க அருவருப்பாக இருந்தது. அப்படிப்பட்ட பொருள் இருப்பதை விட அழிந்து போவதே மேல். அதனால்தான் உடைத்துவிட்டேன்.''

தகவல்: ப. ஜெயராஜா

ஆதாரம்: வாழ்க்கை நிகழ்ச்சிகள்

பட்டணத்தை விட்டுப் புறப்பட்டிருக்கிறோம் என்ற உண்மையைமட்டும் என்னிடம் மறைக்கப் பார்க்க வேண்டாம். நான் ஒன்றும் விகளைப் போல் குழந்தை இல்லை.''

''காமாட்சி ! கமலாவை என்னவோன்னு நினைத்தேன். எப்படிப் பேசுகிறாள் பார்த்தாயா ? இனிமேல் இவளைக் குழந்தையாக நினைக்கக் கூடாது. எல்லா விஷயங்களையும் இவளுக்கும் தெரியப்படுத்தி மனம் விட்டுப் பேச வேண்டியதுதான்.''

'' யார் நினைத்தார்கள், குழந்தை என்று? இரண்டு வருஷமாகச் சொல்லிக்கொண் டிருக்கிறேன், நல்ல வரனாகப் பாருங்கள் என்று. நீங்கதான் எப்ப கேட்டாலும் அவள் என்ன குழந்தைதானே இன்னும் இரண்டு வருஷம் போகட்டும் என்று தட்டிக் கழித்துக் கொண்டிருந்தீங்க.''

''கமலா ! அம்மா சொல்வதைக் கேட்டாயா ? அதையும் உத்தேசம் பண்ணித்தான் இப்போ கிராமத்துக்குக் கிளம்பியிருக்கோம். என் அண்ணா வேதாசலத்தை உனக்கு ஞாபகம் இருக்கோ, என்னமோ ? ரொம்ப நாளாச்சு அவன் பட்டினத்துக்கு வந்து. அவன் வீட்டிலே போய் இந்த யுத்தம் முடிகிற வரை இருந்து கொண்டு அப்படியே உனக்கும் ஒரு நல்ல வரனைப் பார்த்து அங்கேயே கல்யாணத்தை முடித்துவிடப் போகிறேன்.''

''அப்பா, ஏன் அதோடு நிறுத்திவிட்டீர்கள் ? அப்புறம் எனக்கு வளைகாப்பு சீமந்தம் நடந்து, எனக்குப் பெண் குழந்தை பிறப்பதைக் கண் குளிரப் பார்த்து, அவளுக்கு ஆண்டு நிறைவு நடத்தி அட்சராப்பியாசம் செய்து, அப்புறம் பெண்கள் ஆறு கிளாஸுக்கு மேல் படிக்கக் கூடாதென்று சொல்லிப் படிப்பை நிறுத்தி, அவளை யார் தலையிலாவது கட்டி, அவளுக்கு ஒரு குழந்தை பிறந்து....''

''என்னம்மா அடுக்கிக் கொண்டே போகிறாய் ?''

''பின்னே? பெண் ஜன்மத்துக்கு வேறு வேலை என்னப்பா? அடுப்பை ஊதுவதும் குழந்தை பெறுவதும்தானே ?''

''கமலா! உன் மனம் இப்போ சரியில்லை. உன்னுடைய ஆசைப் பூனை மாலுவை விட்டுப் பிரிந்து வந்த துக்கத்தில் என்னென்னவோ பேசுகிறாய் '' என்றார் மாசிலாமணி.

''இந்தச் சமயத்தில் அதோ பாருங்க, அதோ !'' என்றாள் காமாட்சி.

''என்ன? என்ன?'' என்றனர் மற்ற இருவரும் ஏக காலத்தில். காமாட்சி அம்மாள் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தார்கள். ஏழெட்டுக் குரங்குகள் நெடுஞ்சாலையின் ஒரு பக்கத்து மரத்திலிருந்து இறங்கிச் சாலையைக் கடந்து எதிர்ப் பக்கம் சென்றன. அங்கே ஒரு மரத்தின் மேல் ஏறத் தொடங்கின. அந்த மரத்தில் இருந்த பறவை இனங்கள் தங்கள் அமைதிக்குப் பங்கம் வந்துவிட்டதாக ஏக காலத்தில் கிரீச்சிட்டு அலறின. அந்தக் குரங்குகளுள் சில தாய்க் குரங்குகள். அவற்றின் வயிற்றைக் குட்டிகள் கெட்டியாக அணைத்துப் பிடித்துக் கொண்டிருந்தன. அதைக் கவனித்த கமலா, ''என்னைப் போன்ற பெண்களுக்கும் அந்தக் குரங்குகளுக்கும் என்ன வித்தியாசம்?'' என்று முணுமுணுத்தாள்.

அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவர் போல், ''அந்த இரட்டை வால் எங்கே ?'' என்று சத்தம் போட்டார் மாசிலாமணி.

''குரங்குகளைப் பார்த்ததும்தான் பிள்ளை ஞாபகம் வந்ததாக்கும்?'' என்று முகத்தைத் தோளில் இடித்துக் கொண்டாள் காமாட்சி. ''பஸ்ஸைவிட்டு இறங்காதேடா என்று அடித்துக் கொண்டேன். கேட்டானா ? இப்போ பஸ் திடீரென்று கிளம்பி ஓட ஆரம்பித்துவிட்டால் என்ன பண்ணுவது ?'' என்று அங்கலாய்த்தாள்.

''நான் பார்த்து விட்டு வருகிறேன்'' என்று கூறிப் பெற்றோர் தடை ஏதும் விதிப்பதற்கு முன்னால் 'சரேல்' என்று எழுந்து இறங்கி விட்டாள் கமலா. அவளுக்கு உடலும் உள்ளமும் வேக வேக உள்ளே அமர்ந்திருப்பது வேதனையாக இருந்தது.

வெளியே சென்று பார்த்தவள் முகத்தில் புன்னகை அரும்பியது. சில நிமிஷங்களுக்குப் பிறகு மறுபடியும் பஸ்ஸுக்குள் ஏறி வந்து, ''அப்பா தம்பி விசு குறைச்சலா மார்க் வாங்கும் போதெல்லாம் ஒன்றுக்கும் பிரயோசனமில்லை; உருப்படாத கழுதை என்று திட்டுவீர்களே, நீங்க நினைத்தது தப்பு. அவனெப்படியும் பிழைத்துக் கொள்வான். கரி பஸ்தானே இது? பின்னாலே இருக்கிற இஞ்சினின் பிடியைப் பற்றிச் சுழற்றிக் கொண்டிருக்கிறான். 'கொய், கொய்' என்று சத்தம் கேட்கிறதே அதுதான். கண்டக்டருக்குக் கை வலி எடுத்து விட்டதாம். இவன் தன் கை வரிசையைக் காட்டுகிறான்.''

''இப்படி எதையாவது பண்ணிவிட்டு இராத்திரி முழுவதும் கைவலி, கால் வலி என்று அழுது என் பிராணனை வாங்கப் போகி

ரூன்'' என்று காமாட்சி அம்மாள் அலுத்துக் கொண்டாள்.

''அது கிடக்கட்டும், இப்போ நிலைமை என்ன? பஸ் புறப்படுமா, இல்லையா?''

அவர் கேள்விக்குப் பதில் சொல்வதுபோல் பஸ் கண்டக்டர் முகத்தைச் சோகமாக வைத்துக் கொண்டு பஸ்ஸுக்குள் ஏறி வந்தார். ''ஸார்! இஞ்சின் ரிப்பேர். அவங்கவங்க பஸ் டிக்கெட்டை எடுத்துக் கொடுத்தீங்கன்னு பாக்கிப் பணம் வாபஸ் பண்ணுகிறேன். அல்லது அடுத்த பஸ் வரும் வரை காத்திருங்க. இடமிருந்தால் ஏறிக் கொள்ளலாம்'' என்றார்.

''அட கடவுளே!'' என்று தயங்காமல் தலையில் அடித்துக் கொண்டார் மாசிலாமணி. ''இந்த இழவுக்காகத்தானு அத்தனை பாடுபட்டுக் கறுப்பு மார்க்கெட்டில் இரண்டு மடங்கு தொகை கொடுத்து டிக்கெட் வாங்கினேன்!''

''அது என்ன கல்யாணம்? என்னிடம் சொல்லவே யில்லையே?'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''சொன்னால் நீ எனக்கு ஏற்பட்ட நஷ்டத்தைச் சம்பாதித்துத் தந்து விடப் போகிறாயாக்கும்'' என்று கடுகடுத்தார் மாசிலாமணி. ''ரயில் டிக்கெட் கிடைக்கவில்லை. 'உட்கார இடமிருந்தால் போதும்' என்றேன். 'ஒண்டிக் கொள்ளக் கூட இடம் கிடையாது' என்று சொல்விட்டான். அப்புறம்தான் இந்தப் பஸ்ஸுக்கு டிக்கெட் வாங்கித் தொலைச்சேன். அதுவும் பிளாக்கிலே.''

''எந்த வேளையில் வீட்டை விட்டுப் புறப்பட்டோமோ?'' என்றாள் காமாட்சி. ''பஞ்சாங்கத்தைப் பார்த்தீங்களா?''

''பார்க்காமல் என்ன? வீட்டை விட்டுக் கிளம்பியது நல்ல நேரம்தான். ஆனால் பஸ் புறப்பட்டது சரியான ராகு காலத்தில். அதற்கு நான் என்ன செய்ய முடியும்?'' என்றார் மாசிலாமாணி.

## அத்தியாயம் 2

# வசீகரப் பார்வை

**மா**சிலாமணி குடும்பத்தில் அடிக்கடி வாக்குவாதங்கள் நடக்குமென்றாலும் ஒருவரோடு ஒருவர் அன்பாலும் பாசத்தாலும் பிணைக்கப்பட்டிருந்தனர். கமலாவின் ஆசைகள், லட்சியங்கள் வேறாக இருந்தாலும் பெற்றோரை எதிர்த்துக் கொண்டு எதையும் செய்யக்கூடிய பெண் அல்ல அவள்.

சென்னையில் அவர்கள் குடித்தனத்தைக் காலி செய்துவிட்டு நாலு வீடுகளுக்கு அப்பால் ஓர் இல்லத்தில் ஓர் அறையை மட்டும் வாடகைக்கு எடுத்துக் கொண்டு அதில் எல்லாச் சாமான்களையும் போட்டுப் பூட்டி விட்டு, அத்தியாவசியமானதும் விலையுயர்ந்ததுமான உடைமைகளுடன் மட்டும் புறப்பட்டிருந்தார்கள்.

அவர்களைப் போலவே ஏராளமான குடும்பங்கள் பட்டணத்தை விட்டுக் கிளம்பியிருந்தன. எனவேதான் பஸ், ரயில் முதலியவற்றில் இடம் கிடைப்பது குதிரைக் கொம்பாயிருந்தது. ஜப்பானியர் குண்டு வீசப் போகிறார்கள் என்ற பீதியில் பஸ், ரயிலில் மட்டுமின்றிக் குதிரை வண்டியிலும் ரேக்ளாவிலும் ஏன் கால்நடையாகக் கூடச் சென்றவர் உண்டு.

'வருகிறேன்' என்று அண்ணா வேதாசலத்துக்கு ஒரு கார்டு எழுதிப் போட்டு விட்டுப் புறப்பட்டு விட்டார் மாசிலாமணி. ஆனாலும் உள்ளூற அவருக்குக் கவலைதான். கிராமத்தில் வரவேற்பு எப்படி இருக்குமோ? குடும்பத்தோடு போய் டேரா போட்டால் மன்னி என்ன சொல்லுவாளோ? நாலு நாளா, ஒரு வாரமா? மாதக்கணக்கில், வருடக்கணக்கில் கூட ஆகலாம், யுத்தம் முடிவதற்கு. ஏதோ சேமித்து வைத்த பணம் கொஞ்சம் இருக்கிறது. அண்ணா முதலில், 'இதெல்லாம் எதுக்குடா' என்று மறுதளித்தாலும் பின்னர் மன்னியின் போதனைக்கு இணங்கப் பணத்தை வாங்கிக் கொள்வார், நிச்சயம். ஆனால் அதுவும் எத்தனை நாளைக்கு வரும்? கமலாவின் கல்யாணத்தைப் பற்றிச் சற்று முன் பேசினேனே, அதை எப்படி நடத்தப் போகிறேன்?

இப்படி எத்தனையோ பெரிய கவலைகள் அவரை ஆட்கொண்டிருந்த போதிலும் அதையெல்லாம் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு இப்போது ஓர் உடனடிக் கவலை முதல் கவலையாக விசுவரூபம் எடுத்தது. இரவு எங்கே தங்குவது என்ற பிரச்னைதான் அது. பஸ் மேலே நகராது. அடுத்த பஸ் எப்போது வருமோ தெரியாது. வந்தாலும் அதில் இடமிருக்காது. நிற்பதோ நெடுஞ்சாலை. நேரமோ பிற்பகல்.

''அப்பா, 'குடும்பம் நிண்டாடித் தெருவில் நிற்கிறது' என்பார்களே, அது என்ன என்பது புரிந்து விட்டது'' என்றாள் கமலா சிரித்துக் கொண்டே.

அதைக் கேட்டு விட்டு, இவர்களைப் போலவே குழப்பத்தில் ஆழ்ந்திருந்த பயணி



பிரபல எழுத்தாளர் கே. ஏ. அப்பாஸ் கல்லூரியில் படிக்கும்போதே தேச விடுதலைப் போரில் பங்கு கொண்டவர். இவரும் மற்றும் மாணவர்களும் சேர்ந்து பொதுத் தொண்டு ஒன்றுக்காக நிதி திரட்டினர். பல பிரமுகர்களிடம் நிதி வசூலித்து விட்டுக் கடைசியாக ஐக்கிய மாகாண கவர்னராகிய மால்கம் ஹெய்லியிடம் சென்றார்கள். தாங்கள் நிதி வசூலிக்க வந்த விவரத்தை எடுத்துச் சொன்னார்கள்.

கவர்னர் சற்று நேரம் யோசித்துவிட்டு, ''உங்களுக்கு ஆங்கிலேயர்களைக் கண்டால் பிடிக்கவில்லை; அடித்து விரட்டப் பார்க்கிறீர்களே? நிதி வசூலிக்க மட்டும் வரலாமா?'' என்றார். உடனே கே. ஏ. அப்பாஸ், கம்பீரமாக, ''நாங்கள் உங்களிடம் இனாம் வாங்க வரவில்லை. நீங்கள் எங்களிடமிருந்து பெறும் பணத்தில் ஒரு பகுதியைத் திரும்பப் பெறத்தான் வந்தோம்'' என்றார். கவர்னர் மறு வார்த்தை பேசாமல் நூறு ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டார்.

ஆதாரம்: ''வாழ்க்கை நிகழ்ச்சிகள்''.

தகவல்: ப. ஜெயராஜா



வயது முதிர்ந்த இரண்டு நண்பர்கள் தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒருவர், ''அடடா, அவள் நிச்சயம் அழகிதான்'' என்றார்.

''யாரைச் சொல்கிறீர்? நம் எதிரே இரண்டு இளைஞர்கள்தானே வந்து கொண்டிருக்கிறார்கள்?'' என்று நண்பர் கேட்டார்.

''நான் சொன்னது பின்னால் வந்து கொண்டிருக்கும் அழகியை.''

''அவளைப் பார்க்காமலேயே எப்படிச் சொல்ல முடியும்?''

''அவளைப் பார்க்க வேண்டாம். நம் எதிரே வரும் இளைஞர்களைப் பார்; அது போதும்.'' -ராமு

---

யர் சிலரும் சிரித்தார்கள். ஆனால் காமாட்சி அம்மாளுக்குக் கோபம்தான் பொத்துக் கொண்டு வந்தது.

''பேச்சுதான் வாய் கிழியும். உருப்படியா ஒரு யோசனை தோணுது'' என்றாள்.

''சாதாரணமாக என் யோசனையை யாரும் கேட்பதோ, மதிப்பதோ இல்லை. அதனால் நானும் சொல்வதில்லை. ஆனால் இப்போ நீயே கேட்பதால் சொல்கிறேன்'' என்றாள் கமலா. ''அப்பா! இப்படி வாங்களேன்'' என்று பெற்றோரைச் சற்று ஒதுக்குப் புறமாக அழைத்துப் போனாள்.

அவள் பேசியதைக் கேட்டு விட்டு, ''அடி என் தங்கமே! முதல் தடவையாக ஒரு நல்ல யோசனை சொல்லியிருக்கே'' என்றாள் காமாட்சி.

மாசிலாமணி விகவை அழைத்துக் காதோடு ஏதோ கூறினார். விக, விடுவிடென்று அவர்கள் வந்த வழியாகவே திரும்பி நடக்கலானான்.

சற்று நேரம் கழித்து அவன் ஒரு கட்டை மாட்டு வண்டியில் வந்தான். அதில் மாசிலாமணி குடும்பம் ஏறிக் கொண்டது. ரிப்பேரான பஸ்ஸினால் நிர்க்கதியாக விடப்பட்ட பயணிகள் சிலர் பொறாமைக் கண்களோடு பார்த்துக் கொண்டிருக்க அந்தக் குடும்பம் மாட்டு வண்டியில் பயணத்தைத் தொடர்ந்தது.

''எப்படி என் யோசனை?'' என்றாள் கமலா. அவள் வருகிற வழியில் ஒரு கட்டை வண்டியைப் பஸ் கடந்து செல்வதைக் கவனித்திருந்தாள். அதில் சுமை ஏதும் ஏற்றி இருக்கவில்லை. அது பக்கத்தில் இருக்கும் ஏதோ ஒரு கிராமம் அல்லது நகரத்துக்குத்தான் போய்க் கொண்டிருக்க வேண்டும். பஸ் ரிப்பேராகிக் காத்திருக்க நேர்ந்த சமயத்தில் அது அவர்களை நோக்கிக் கணிசமாக முன்னேறி இருக்கும். கிட்டத்தில் வந்து விட்டால் பஸ்ஸில் வந்த பயணிகளுக்கிடையில் அதில் ஏறுவதற்கு ஏகப் போட்டி இருக்கும். எனவே தம்பி விகவைத் தாங்கள் வந்த பாதையிலேயே திரும்பிப் போகச் சொல்லிச் சாலையில் ஒரு வளைவுக்கு அப்பால் அந்த வண்டியைப் பிடித்து முன்பணமும் கொடுத்து அதில் ஏறி வரச் செய்யலாம் என்பதுதான் கமலாவின் யோசனை. அந்த வண்டி போய்ச் சேர்கிற கிராமம் அல்லது நகரத்தில் இரவுப் பொழுதைக் கழித்து விட்டால் பிறகு மறுநாள் பயணத்தைத் தொடர வேறு ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

கமலா திட்டமிட்டபடியே எல்லாம் நடந்தது. கட்டை வண்டிப் பயணம் வசதிக் குறைவாக இருந்தாலும் விகவுக்கும் கமலாவுக்கும் புதிய அனுபவமாக, உற்சாகமளிப்பதாயிருந்தது. மாலை நேரத்துச் சூரியன் செக்கச்சிவந்த பந்தாகச் சுற்றிலும் மஞ்சள் நிற ஒளி வட்டத்துடன் தகதகக்கும் அழகைக் கமலா ரசித்தாள். இருபுறமும் வயல்களில் நடவு முடிந்து சிறிது காலமே ஆகியிருந்ததால் இளம் பச்சை நிறப் பயிர் பூங்காற்றில் அலைஅலையாக அசைவது மனோரம்மியமான காட்சியாக விளங்கியது. ஆங்காங்கே மூன்று நான்கு வெள்ளை நாரைகள் ஜிவ்வென்று சேர்ந்தாற் போல் பறந்து வந்து ஒய்யார அழகுடன் வயல்களில் இறங்கின.

''டைவ் பாம்பர் மாதிரி இறங்குகிறது பார்த்தியாடா'' என்றாள் கமலா தம்பி விகவிடம். அவன் அவளை லட்சியம் பண்ணாமல் வண்டிக்காரனிடம், ''நான் கொஞ்சதூரம் ஓட்டி வருகிறேனே'' என்று கயிற்றைப் பிடித்துக் கொள்ள அனுமதி கோரி கெஞ்சிக் கொண்டிருந்தான்.

மகிழ்ச்சிக் கிளுகிளுப்பெல்லாம் ராம பட்டணம் எல்லையை நெருங்கியதும் முடிந்து போயிற்று. துரதிருஷ்டவசமாக வண்டி மாடுகளில் ஒன்று படுத்துக் கொண்டு விட்டது. வண்டிக்காரன் மாட்டை எழுப்பப் பார்த்தான். முடியவில்லை.

''சாமி! மாடு இனிமேல் நடக்காது! அதோ இருக்கிறது ஊர். கூப்பிடு தூரம்தான். வாடகையை முழுசாகக் கொடுத்து விட்டு, இறங்கிப் போங்க'' என்றான்.

''இறங்கி நடப்பது பெரிய காரியம் இல்லையப்பா. இத்தனை சாமான்களையும் எப்படிச் சுமப்பது?'' என்றார் மாசிலாமணி. ''இங்கே ஜாகை வசதியெல்லாம் எப்படி? சத்திரம் சாவடி, ஓட்டல் கீட்டல் ஏதாவது உண்டா?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஊருக்கு வரணும்னு சொன்னீங்க. ஏத்திக்கிட்டு வந்தேன். இப்ப இறங்குங்க. இந்தப் பக்கமா முதலாளி ஐயா வந்தால் கோவிப்பார்'' என்றான் வண்டிக்காரன்.

காமாட்சி அம்மாள் எல்லோருக்கும் முன்னதாக இறங்கி சாலையோரம் நின்றாள். சாமான்களைத் தகப்பனார் வண்டியிலிருந்தபடி எடுத்துத் தர கமலாவும் விகவுமாகப்பிடித்து மெல்லக் கீழே இறக்கி வைத்தார்கள்.

வண்டிக்காரன், ''தே, ஏ, உம், தே! எழுந்திருங்கறேன்!'' என்று மாட்டை அதட்டியும் தாஜா பண்ணியும் பார்த்துக் கொண்டிருந்தான்.

காமாட்சி அம்மாளைத் தவிர மற்றவர்கள் காரியமாக இருந்ததால் நவநாகரிகமாக

உடையணிந்த ஒரு பெண்மணி அந்த வழியா கப் போவதை அவர்கள் பார்க்கவில்லை.

காமாட்சி அம்மாள் மட்டும் அவளை நிறுத்தி, ''ஏண்டி பெண்ணே! இந்த ஊரில் இராத் தங்க இடம் கிடைக்குமா?'' என்று கேட்டாள்.

அவள் குரல் ஒலித்ததும் மற்ற மூவரும் திரும்பிப் பார்த்தனர்.

அந்தப் பெண் மிகவும் அழகான யௌவன மங்கை என்பதை முதல் பார்வையிலேயே கண்டாள் கமலா. அடக்கமாக ஆனால் நாகரிக மாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந் தாள். கையிலிருந்து தொங்கிய 'ஹாண்ட் பாக்' மடித்து வைத்திருந்த சிறு குடை, நீரோட்டம் போன்று நெளிநெளியான பட் டைக் கோடுகளை உடைய மெல்லிய ஆறு கெஜ சேலை, சிறிதளவு குதிகாலை உயர்த்திக் காட்டிய ஸாண்டல்ஸ், இடது கரத்தில் கைக்கடிகாரம், வலக் கரத்தில் ஒரே ஒரு தங்க வளையல், கழுத்தில் டாலருடன் ஒற்றை வடச் சங்கிலி, காதில் நவீன மோஸ்தர் தோடு, பின்னிப் பிச்சோடா போட்ட கேசம், காதருகே சுருண்டு தொங்கிய மயிரிழைகள், பவுடர் பூசிப் பளிச்சென்ற முகம், நெற்றித் திலகம், மைதீட்டிய விழிகள், எடுப்பும் எழிலும் மிக்க தோற்றம் எல்லாவற்றையும் ஒரே கண்ணோட்டத்தில் பார்த்துக் கொண்ட கமலா, தன்னுடைய பயணக் களைப்பு மிக்க கசங்கிய கோலத்தையும் கர்நாடக பாணி யையும் கூடவே எண்ணிப் பொருமினாள்.

'இவள் ஏதோ உத்தியோகத்தில் இருக் கிறாள்' என்பது உடனே புரிந்து போயிற்று கமலாவுக்கு. கரத்தில் அவள் மடித்துப் போட்டிருந்த கறுப்புக் கோட்டு அவளை ஒரு வக்கீல் என்று காட்டிக் கொடுத்தும் விட்டது.

'அடேயப்பா! இந்த முகம்தான் எத்தனை களையானது! இந்த விழிகள்தாம் எவ்வளவு வசீகரமானவை! இவள் வழக்காடவே வேண்டாம். கோர்ட்டுக்குள் வந்து நின்று கண்களைச் சுழற்றி நாலு புறமும் ஒரு பார்வை பார்த்தால் போதும். கேஸ் ஜெயம்தான்!' என்று எண்ணினாள் கமலா.

'ஆனால் அப்படிப்பட்ட வெற்றியை விரும்புகிறவளாகவும் இவள் தோன்றவில்லை. அறிவுக் களையும் இந்த முகத்தில் விகசிக்கிறது. இந்தக் கண்களின் பிரகாசமும் ஒளிரும் நெற்றி யும் தேர்ந்த ஞானத்தின் விளைவுகள்.'

இவ்வாறு முடிவு கட்டிய கணத்தில் தான் எப்படியெல்லாம் சுதந்திரமாக இருக்க வேண்டும், சாதனைகள் புரிய வேண்டும் என்று விரும்பினாளோ அப்படியெல்லாமும் அதற்கு மேலும் தன் எதிரே நிற்கும் இந்தப் பெண் விளங்குகிறாள் என்று கமலாவுக்கு நிதர்சன மாகப் புரிந்தது. அதனால் மகிழ்ச்சியும் பொறா மையும் ஒரே சமயத்தில் தன் நெஞ்சை நிரப்புவதை அவள் உணர்ந்தாள். அந்தப் பெண்ணுடன் இன்னும் நெருங்கிப் பழகி, நட்பை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. கூடவே, 'இவளுடன் என்ன பேச்சு' என்று மனம் வினவியது.

''அம்மா! என் பெயர் 'ஏண்டி பெண்ணே' யில்லை. பவானி. இந்த ஊரில் இராத் தங்க இடம் வேண்டுமென்றால் ஹோம்ரூல் கோபால கிருஷ்ணன் வீட்டுக்குப் போங்கள்'' என்றாள் அந்தப் பெண்.

''ரொம்பப் பரோபகாரியோ?''

''அவர் பரோபகாரியோ என்னமோ, அவர் மகன் கல்யாணசுந்தரம் ரொம்ப, ரொம்ப, ரொம்ப, ரொம்ப நல்லவர். பிற ருக்கு உதவவென்றே பிறந்தவர். நிச்சயம் உங்களுக்கு இடம் தேடிக் கொடுப்பார்'' என்ற பவானி கமலாவைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்.

அந்தப் புன்னகை நட்பின் அறிகுறியாகவும் தோன்றியது, ஏளனமாகவும் பட்டது கமலா வுக்கு..

(தொடரும்)

ஆக்கல் தொழிலே மேற்கொண்டிருந்த பிரும்மாவுக்கு ஓர் இறுமாப்பு. தாம் சிருஷ்டிகளைப் படைக்காவிட்டால், காத்தல் தொழில் புரியும் இந்த விஷ்ணுவுக்குத்தான் ஏது வேலே? அழித்தல் தொழில் புரியும் அந்தச் சிவனுக்குத் தான் ஏது வேலே என்று!

'படைத்தால் ஆயிற்ரு? காப்பதல்லவா பெரிய காரியம்!' என்ற எண்ணம் விஷ்ணுவுக்கு.

ஆக்கலேயும், காத்தலேயும், அழித்தலேயும் தன் உளவாக்கிய பரம்பொருள் சிரிக்கிறது. 'என்னே உணருங்கள். அப்புறம் உங்கள் பெருமையைப் பேசிக் கொள்ளலாம்' என்று கூறி அருட்பெரும் சோதியாக, செம்பொன் கடராக வானளாவ நிற்கிறது; தன் அடி - முடி காண அழைக்கிறது. பிரும்மா அன்னப் பறவை உருவம் தாங்கி வானுலகுக்குப் பறக்கிருர். விஷ்ணு வராக உருவம் தரித்து அடி காணப் பூமியைக் குடைந்து கொண்டு போகிருர். இருவராலுமே அடி முடி காண முடியவில்லே. விஷ்ணு வராகமாகக் குடைந்து கொண்டு சென்ருர் என்பதை நிரூபிக்கவே தான், திருவண்ணுமலேயைச் சுற்றியுள்ள மற்ற குன்றங்கள் பாறைக் குவியல்களைக் காட்சி தருகின்றன போலும்!



'தில்லேயைக் காணக், காசியில் இறக்கச்
சிறக்கும் ஆரூர் தனில் பிறக்க,
எல்லேயில் பெருமை அருணையை நினைக்க
எய்தலாம் முக்தி'

என்று கூறுகிறது அருணுசலப் புராணம்.

திருவாரூரில் பிறப்பதோ, காசியில் இறப்பதோ எல்லோருக்கும் வாய்க்கிற விஷயமல்ல; பிறப்பவரும் இறப்பவரும் நினைத்துச் செயல்படுகிற காரியமல்ல. தில்லேயைக் காணப் புறப்படலாம் என்ருலும் இடையில் எத்தனையோ இடையூறுகள் ஏற்பட்டு எண்ணம் ஈடேருமலும் போக

# ஜோதிய நெருப்பு





# ரா. வீழிநாதன்

★ யாகசாலையிலிருந்து கலசங்கள் எடுத்து வரப்பெற்ற காட்சி. படத்தில் அம்மணி அம்மாள் கோபுரமும் வடக்குக் கோபுரமும் தெரிகின்றன.

★ ஒன்பது கோபுரங்களும் ஒரே சமயத்தில் தரிசனம்.

★ சுவாமி சந்நிதி மூலஸ்தான விமானத்தில் கும்பாபிஷேகம். அப்பால் மலைச்சாரலிலெல்லாம் மக்கள் திரள்.



லாம். ஆனால் திரு அண்ணாமலையை நினைத்தால் போதுமே கடைத்தேற!

நினைத்தாலே முக்தி தரும் அண்ணாமலையானின் கும்பாபிஷேகத்தைக் காணுவதென்றால்... அந்தப் பாக்கியத்தை எண்ணியபடியே காரில் பயணம் செய்து கொண்டிருந்தோம்.

ஐம்பெரும் பூதங்களில் ஒன்றான அக்கினித் தலமாக, ஜோதி க்ஷேத்திரமாகத் திகழும் அருணகிரியை நெருங்கும்பொழுது மலைவாயில் விழுந்து கதிரவன் செக்கர் வானம் படைத்திருந்தான். அதன் பகைப்புலனில் அண்ணாமலை அழகாகத் தோற்றம் காட்டிக் கொண்டிருந்தது.

அருவத்தையும் உருவத்தையும் இணைக்கும் ஜோதி வழிபாடுதான் எத்தனை பழைமையானது! அத்வைதத்தின் ஆரம்பப் பாடத்தையும் இறுதிப் பாடத்தையும் புகட்டிப் பசுமரத்தாணி போல் மனத்தில் பதிய வைக்க வல்லது! அக்கினிக்கு எந்தப் பொருளையும் தன் உருவாக்கிக் கொள்கின்ற, தன் உள் அடக்கிக் கொள்கின்ற ஆற்றல் உண்டு. ஒரு விளக்கிலிருந்து பல்லாயிரம் விளக்குகள் ஏற்றலாம். அவை ஒவ்வொன்றும் தன்னுள் பூரணமானவை. விண்டாலும் விள்ள முடியாதவை. இணைந்தும் செயற்படக்கூடியவை; பிரிந்தும் இயங்கக் கூடியவை. இவ்வுண்மையைப் பறைசாற்றிப் பக்தர் உள்ளங்களைக் கொள்ளை கொள்வதே போல் இந்தப் புனித தலத்தின் மாபெரும் தீபத் திருவிழாவாக கார்த்திகை தீபம் துலங்குகிறது.

ஏறக்குறைய இருபத்தைந்து ஏக்கர் நிலப் பரப்பில் பரந்து விரிந்திருக்கும் அண்ணாமலையார் ஆலயத்தின் ராஜகோபுரம் தென் விந்தியாவிலேயே மிகவும் உயரமானது. நமது நாட்டின் சில்ப - ஆகம சாஸ்திரத்துக்கு இலக்கணமும் இலக்கியமும் ஒருசேர வகுத்துக் காட்டுகிறது ஒன்பது கோபுர வாயில்களையும் ஏழு பிராகாரங்களையும் கொண்ட இந்தத் திருக்கோயில்.

அப்பரும், சம்பந்தரும், மணிவாசகரும் போற்றிப் பரவிய இந்தத் தலம் திருப்புகழ் பாடிப் புகழ் அரசு ஓச்சிய அருணகிரியாரின் பிறப்பிடம்.

முக்தித் தலமான இவ் அருணையில், ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள், பகவான் ரமணர், குருசுகநாதர், ஜடினி சண்முக யோகினி போன்ற எத்தனையோ யோகிகள் தவமியற்றிப் பரமானந்தம் பெற்றவர்கள்.

எட்டு மைல் சுற்றளவு கொண்ட இந்த மலையே தெய்வமாக வணங்கப் படுகிறது. இம்மலையை வலம் வந்தால் ஏறக்குறைய முந்நூற்று அறுபது தீர்த்தங்களையும் நானூறு லிங்கங்களையும் தரிசிக்கலாம். ஸ்ரீ ரமணாசிரமம், சேஷாத்ரி சுவாமிகள் அதிஷ்டானம் ஆகியவற்றையும் பார்க்கும் பேறு பெறலாம். மேற்புறத்தில் இருக்கும் அடி அண்ணாமலை என்னும் கோயிலே ஆதி அருணாசலம் கோயில் என்கிறார்கள். கலைகச்சிதமான கோயில். எழில்மிகு அருள் விக்கிரகங்களைக் கொண்டது. கோயிலில் தொங்கிக் கொண்டிருந்த குளோபர் விளக்குகளைப் பார்த்தபோது, அத்தனை மின்விளக்குகளையும் அணைத்து இந்த விளக்குகளை ஏற்றினால் எவ்வளவு அழகாக


புனாவில் உள்ள பி. கே. எஸ். ஐயங்கார் என்ற யோகப் பயிற்சி ஆசிரியருக்கு அமெரிக்கச் சிறைகள் பலவிடமிருந்து காணிக்கைச் செக்குகள் வந்தன. ஆச்சரியம் என்னவென்றால், ஐயங்காருக்கு அவர்கள் யாரையும் முன்னே பின்னே தெரியாது. பிறகு ஏன் அனுப்பினார்கள்?

விஷயம் இதுதான்: அவர்கள் அனைவரும் கலிபோர்னியச் சிறைக் கைதிகள். ஐயங்கார் எழுதிய யோக புத்தகத்தை உதவியாகக் கொண்டு காதித் என்பவரிடம் ஆசனங்களைக் கற்று வருபவர்கள். தங்கள் நன்றியறிதலை இப்படித் தெரிவித்திருக்கிறார்கள்.

— தி டைம்ஸ் ஆப் இந்தியா - முத்து.

இருக்கும் என்று யாருமே கற்பனை செய்து பார்ப்பார்.

இத்துணை பெருமை வாய்ந்த திருவண்ணாமலைக் கோயிலைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்விக்கும் பெரும் பணியை நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினர் பக்தர் குழாங்களின் ஒத்துழைப்புடன் ஏற்று நிறைவேற்றி யிருக்கிறார்கள்.

யாகசாலையைப் பார்த்து வரப் புறப்பட்ட நாங்கள் மக்கள் கூட்டம் நெரிவதைக் கண்டு வியந்து போனோம். மக்கள் வெள்ளம் கடல் அலையை நினைவூட்டியது. ஓரடி முன்னேறினால் பத்தடி பின் நகர்ந்தோம். தமிழ் நாடே கரை புரண்டு வந்திருக்கும் போலிருந்தது.

யாகசாலையை நோக்கிச் சிரமப்பட்டு நடந்தோம். மின் விளக்குகள் மாய லோகம் ஒன்றைச் சிருஷ்டித்து இந்திர ஜாலம் புரிந்து கொண்டிருந்த விந்தை முகப்போடு யாகசாலை தொடங்கியது. எப்படியோ முண்டியடித்துக் கொண்டு யாகசாலையைத் தரிசித்தோம்.

இரவு வெகு நேரம் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பிய நாங்கள் நல்ல உறக்கத்திலும் கும்பாபிஷேக நினைவிலேயே திளைத்தோம். எனவே, மறுநாள் சட்டுப் புட்டென்று நீராடி விட்டுக் கும்பாபிஷேகம் காணப் புறப்பட்டோம்.

படியேறி மண்டபத் தளத்தில் அமர்ந்த நாங்கள் ஒவ்வொரு கோபுரமாக இனம் கண்டோம். ராஜகோபுரம், வல்லாள மகாராஜா கோபுரம், கிளிக் கோபுரம், என்று! மேல்புறம் இருந்த கோபுரத்தைப் பேய்க் கோபுரம் என்றார்கள். 'அந்தப் பெயர் ஏன் வந்தது?' என்று அறிய என்னைச் சுற்றி இருந்தவர்களைக் கேட்டுப் பார்த்தேன். ''தெரியாததனால்தானே 'கம்' என்று இருக்கிறோம்! அம்மணி அம்மாள் கோபுரத்தைப் பாருங்களேன்!'' என்றார் ஒருவர்.

''பெரிய பணக்காரர்களோ? இத்தனை பெரிய கோபுரம் கட்டி யிருக்கிறார்களே!''

''இந்த அம்மாவிடம் ஓர் அதிசய சக்தி இருந்திருக்கிறது. இன்னாரிடம் இத்தனை பணம் இருக்கிறது என்று கரெக்டாகச் சொல்லிவிடுவார்களாம். அதில் ஒரு பங்கை வரி போல் வாங்கி இந்தக் கோபுரத்தைக் கட்டினார்களாம்.''

''பேஷ்!'' திரும்பிப் பார்த்தேன். எனக்குத் தெரிந்த வருமானத்துறை அதிகாரிகள் இருவர் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர், இந்தச் சக்தி தங்களுக்கும் இருந்தால் எவ்வளவு உதவியாக இருக்கும் என்கிறாற்போல!

நான் இந்த விசாரணையை முடித்துக்கொள்வதற்கும், கலசங்கள் கும்பாபிஷேகம் செய்ய ஒவ்வொரு கோபுரங்களில் விதி முறைப்படி வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது.

இந்தக் காலத்து 'கன் டைம்' அந்தக் காலத்து அதிர்வேட்டு நேரம் போலும்! அதிர் வேட்டு முழங்கியதும் ஏககாலத்தில் ஒன்பது கோபுரங்களுக்கும், உண்ணாமுலையம்மன், அண்ணாமலையார் கருவறைக் கும்பங்களுக்கும் அபிஷேகம் நடந்தது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. அவ்வளவையும் ஏக காலத்தில் பார்க்க முனைந்தன அத்தனை கண்களும். கண் பெற்ற பயனைப் பெற்று விட்டதாக மகிழ்ந்தாலும், 'காணக் கண் கோடி வேண்டும்' என்று ஒவ்வொருவரும் பிரார்த்தனை செய்ய வேண்டிய நிலையில் இருந்தார்கள். மலையெல்லாம் மக்கள், கூட கோபுரங்களெல்லாம் மக்கள்; மாட மாளிகைகள் எல்லாம் மக்கள். எல்லோருடைய மனத்திலும் ஒரு நிறைவு. 'இந்த மாதிரி வைபவங்களைக் காணும் பாக்கியம் வாழ்க்கையில் ஓரிரு முறை கிடைத்தால் அதுவே பெரிது!' என்று அண்ணாமலையாரின் நினைவாகவே கலந்தார்கள். சிலருக்கு என்ன, பலருக்கும் இது போன்ற பெரிய வைபவங்களில் நேர்ந்திருக்கக் கூடிய சிரமங்கள் எதுவுமே இப்போது யாருக்கும் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை.

அண்ணாமலையாரின் நினைவை மனத்தில் தேக்கிய வண்ணம் கலவைக்குப் பயணமானோம். அருட்பெருஞ் சோதி அண்ணாமலையாரின் மறு வடிவமாய், நடமாடும் தெய்வமாய்ச் செம்பொன் கதிர் பரப்பக் கலவை வாழ் காஞ்சி முனிவர் தரிசனம் தந்தார்கள். என் பெயரைக் கூறிக் கூட வந்த நண்பர்களில் ஒருவர் அறிமுகம் செய்து வைக்கவே, ''திருவண்ணாமலைக்குப் போய் வருகிறீயோ?'' என்று கேட்டார்கள். என்னை முந்திக்கொண்டு பதில் கூறிவிட்டார் நண்பர். கையமர்த்திக் காஞ்சிக் கும்பாபிஷேகத்தையும் கண்டுசெல்ல அநுக்கிரகித்தார்.

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ காஞ்சி காமாட்சிக்குக் கும்பாபிஷேகம் செய்யும் நேரத்தில் ஸ்ரீ காமாட்சி கோவிலின் கோபுரங்கள் அனைத்தும் குடமுழுக்கு ஆடின. அதற்குப் பின் ஸ்ரீ ஆதி சங்கரர் சந்நிதிக்கும் கும்பாபிஷேகம் செய்தார்கள் ஸ்ரீ ஸ்வாமிகள். அருகில் நின்று அதனைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிட்டியபோது நெஞ்சம் நெகிழ்ந்தது; கண்கள் பனித்தன. ஆனந்தம் என்பது என்னவென்று புரிகிறாற்போன்ற ஒரு நினைப்பில் மிதந்தேன். குட முழுக்கைப் பார்த்த — பார்க்காத அனைவருக்கும் அந்த ஆனந்தம் பரமானந்தமாகக் கிடைக்க வேண்டும். ஸ்ரீ காஞ்சி காமாட்சி அன்னையும் உண்ணாமுலையம்மன் உடனுறை அண்ணாமலையாரும் அருள்வார்களாக!

# வானதி, கயல்விழி, பூங்குழலி!

உலக இந்து மாநாட்டுச் செய்தி குறித்துக் கல்கியில் வந்துள்ள கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். இம்மாநாட்டில் பர்மாவி லிருந்து பிரதிநிதிகள் எவரும் பங்கு கொள்ள இயலாமல் போய்விட்டது. அங்கு இன்னமும் 2,72,000 இந்தியர்கள் வாழ்ந்து வருகின் றனர்!

''மதப் பிரசாரத்துக்குப் பர்மா அரசு உதவியாகவே உள்ளது. ஆனால் மத சம்பந்த மான நூல்கள், பாடப் புத்தகங்கள் பணம் அனுப்பி இறக்குமதி செய்ய முடியாது. நாணயக் கட்டுப்பாட்டுச் சட்டம் தடையாக இருக் கிறது. எனவே இந்து சமய வளர்ச்சிக்குரிய தேவாரம், பன்னிரு திருமுறைகள், நாலாயி ரத் திவ்யப் பிரபந்தம் போன்ற நூல்களும், சென்னை அற நிலையப் பாதுகாப்புக் கழகத் தாரின் 'திருக்கோயில்' தருமபுர ஆதீனத் தாரின் 'ஞானசம்பந்தம்' திருப்பனந்தாள் ஆதீனத்தாரின் 'வைகுண்டம்', 'குமரகுரு பரன்' போன்ற பிரசுரங்களும் இலவசமாக அனுப்பி வைக்க வேண்டும். அதோடு சமயப் பிரசாரத்துக்காக மூன்று மாதங்களுக்கு ஒரு முறை சமயப் பிரசாரகர்கள் வந்து போக வேண்டும். சமயத் துறையில் உழைக்கும் தமிழ் நாட்டு ஆதீனங்கள், மத நிறுவனங்கள், எங்களின் இத் தேவைகளை நிறைவேற்றித் தரவேண்டும். அவ்வாறு செய்யப்படாவிட் டால் காலக் கிரமத்தில் இந்து சமயம் மறைந்து அழிந்து படும்.''

இவ்வாறு பர்மாவாழ் தமிழர் திரு மு. அண்ணாமலை (75, 29வது வீதி, ரங்கூன்) ஸ்ரீ காஞ்சிப் பெரியவருக்கு எழுதியுள்ளார்.

தர்மபுரி
24—3—76 கே. பாலசுந்தரம்

லக்ஷ்மணபுரியில் ''ரவீந்திராலயா'' என்ற கட்டிடத்தில் அண்மையில் இரவு ஏழரை முதல் பதினொரு மணி வரை நடந்த ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் கச்சேரியைக் கேட்ட மகிழ்ச்சியில் எழுதுகிறேன். ''கான மழை' என்று வர்ணிக்க வேண்டும்.

இந்த ஊர் வந்து பதினெட்டு வருஷங் களாக அவருடைய கச்சேரியை நேரில் கேட்கும் வாய்ப்பே இல்லாமல் போய்விட் டது. என் பாக்கியம் அன்று முன் வரிசை யில் உட்கார்ந்து கேட்டேன். கமாஸ், மாயா மாளவ கௌளை, சங்கராபரணம் எல்லாமே ரொம்ப உசர்வு. ராதாவின் இனிமையான சாரீரமும் சேர்ந்து மெய்சிலிர்க்க வைத்தது. அந்த அந்தக் கடவுளையும் உச்சரிக்கும்போது நேரில் பார்ப்பது போல் ஒரு பிரமையை ஏற் படுத்திவிடுகிறார். 'காமாக்ஷி, மாதா, அன்ன பூர்ணேசுவரி' என்று பாடும்போது எனக்கு அழுகையே வந்து விட்டது.

வங்காளி, ஹிந்தி, குஜராத்தி, மராட்டி, கன்னடம் என்று பாட்டுக்களைச் சரம் கோத் தாற்போல் பாடி எல்லா மாநிலத்தவரையும் கட்டுப்படுத்தி விட்டார். கையில் தாளத் துடன் கண்களை மூடிக் கொண்டு பஜன்கள் பாடும்போது சாக்ஷாத் மீராவோ என்று தோன்றியது. ரேவகுப்தியில் 'கோபாலகா' என்ற பாட்டு ரொம்பப் பிரமாதம்.

கடவுள் அவர்களுக்கு மேன்மேலும் பூரண ஆயுளையும் ஆரோக்கியத்தையும் கொடுத்து லட்சோப லட்சம் ஜனங்களைப் பரவசத்தில் ஆழ்த்த சதா பிரார்த்தனை செய்கிறேன்.

லக்னௌ
22—3—76 வி. நாகலக்ஷ்மி

**1970**-ம் ஆண்டுக்கு முன் ஓய்வு பெற்ற ஆசிரியர்களின் ஓய்வு ஊதியம் அதற்குப்பின் ஓய்வு பெற்றவர்களோடு நோக்குமிடத்து வெகு குறைவாயிருக்கிறது. 1970-க்கு பின் சம்பளக் கமிஷன் அளித்த திட்டத்தை முன்ன வர்களுக்கும் மேற்கொண்டால், முதுநிலை ஆசிரியர்களுக்கு ஏறக்குறைய 140 ரூபாயும், இளநிலை ஆசிரியர்களுக்கு 115 ரூபாயும் ஓய்வு ஊதியமாகக் கிடைக்கும். தற்கால நிலையில் அது ஆசிரியர்களுக்குப் பெருமளவுக்கு உதவுவதாக இருக்கும்.

அவர்களுக்கு அளிக்கப்பெறும் ஓய்வு ஊதி யம் அரசின் செலவிலேயே மணியார்டர் மூலம் கிடைக்க வழி செய்ய வேண்டும். இந்த ஓய்வு ஊதியச் சலுகை அவர்களுக்குப் பின் அன்னாரின் குடும்பங்களுக்கும் நீடிக்க வழி வகை செய்ய வேண்டும்.

விஷ்ணுபுரம்
28-3-76 ஜி. பஞ்சாபகேசன்

'கூற்கண்டு கானம்' படித்து இன்புற்றேன். அதில் குறிப்பிட்டபடி, 'ரங்கபுர விஹாரா' ஸ்ரீரங்கம் ரங்கநாதரைக் குறித்துப் பாடப் பெற்றதல்ல. தேரழுந்தூர் பரிமள ரங்கரைப் பற்றிய பாடலாகும்.

சென்னை—33
2—4—76 இந்திரா பத்மநாபன்

காலத்தால் அழியாத கல்கியின் கதா பாத் திரங்களின் பெயர்களைத் தங்கள் மக்களுக்கு வைத்துப் பலர் மகிழ்வதைப் பொன்னியின் புதல்வரில் சுந்தா குறிப்பிட்டுள்ளார். பெய ரினிமை கருதி என் அண்ணன் தன் பெண் மக்கள் மூவருக்கும் முறையே 'வானதி, கயல் விழி, பூங்குழலி' எனப் பெயர் சூட்டியுள்ளார்.

நெல்லிக்குப்பம்
3—4—76 க. அன்பரசன்

பேராசிரியர் மா. ரா. பொ. குருசாமி அவர்களது கல்கி நினைவுச் சொற்பொழிவைப் பற்றிய கட்டுரை கண்டு மகிழ்ந்தேன். 'மணி யான பணி' என்ற தலைப்பைக் கொண்ட அக்கட்டுரையும் ஒரு மணியான கட்டுரை தான். கட்டுரையின் இடையே 'யாப்பெருங் கலக் காரிகை' என்ற சொற்றொடர் காணப் படுகிறது. அச்சுப் பிழையாக இருக்கலாம். யாப்பருங்கலக் காரிகை என்பதுதான் சரி.

திருப்பூர்
2—4—76 க. கிருஷ்ணன்

OBM-5255 TM

**ரவிக்குக் காயம்
படும்போது**



# ரவியின் அன்னை, நோய் தொற்றாமல் அவனைப் பாதுகாக்க, BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்கள் திறந்திருந்தால் தொற்று நோய் பரவக்கூடும். எனவேதான், விவேகமுள்ள தாய்மார்கள், காயங்களைப் பாதுகாத்து ஆற்றுவதற்கு பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகளை மட்டுமே நம்புகிறார்கள். பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்குகள் நோய்க் கிருமி தொற்றாமல் காயங்களைக் காக்கின்றன. அவற்றிலுள்ள நிரூபணமான ஆன்டிசெப்டிக் மருந்து மெர்க்கியூரோக்ரோம், பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து ஆற்ற உதவுகிறது.

பாண்டு-எய்ட்
பிராண்ட்
டிரஸ்ஸிங்குகளை
ஜான்ஸன் & ஜான்ஸன்*
மட்டுமே தயாரிக்கிறார்கள்.

*Johnson & Johnson**




மெர்க்கியூரோக்ரோம்
மருந்து கலக்கப்பட்டது.

* Trademark © J&J 75

### அத்தியாயம் 27

## பிரிவினும் சுடுமோ பெருங்காடு

அந்த நிலையிலும் சாலியூர்த் தாவளி விழிப்படைந்தாள்; தைரிய மடைந்தாள். இக்கட்டான நேரங்களில் பெண்ணுக்கு வருகின்ற துணிச்சல், சிங்கத்துக்குக்கூட வராது.

சகோதரிகளிடம் மட்டுமே அதிகம் பேசிய சாலியூர்த் தாவளி, அந்த வீரனைப் பார்த்து, "நான் யார் தெரிகிறதா?" என்றாள்.

வீரன் மௌனமாக நின்றான்.

"ரதத்திலே பருவம் அடைந்த பெண்கள் இருக்கிறார்கள், அவர்களை யாரும் பார்க்க முடியாது!" என்றாள்.

உடனே சில வீரர்கள் மற்ற வீரர்களை விலக்கி ரதத்துக்கு வழி விட்டனர்.

"நடக்கட்டும்" என்றாள் சாலியூர்த் தாவளி.

ரதம் நடக்கவில்லை; பறந்தது.

சிறிது தூரம் சென்றதும் திரைச் சிலையை விலக்கிக் கொண்டு எட்டிப் பார்த்த மார்த்தாண்டவர்மன் ஈனக் குரலில், "அங்கதா!" என்றான்.

"மகாராஜா!"

"நான் இப்பொழுது மகாராஜா இல்லை; ஓர் அநாதை; கதியற்றவன்; என்னை நீ பெயர் சொல்லியே அழைக்கலாம்."

அங்கதன் கண்கள் குளமாயின.

"ஸ்ரீரங்கத்தில் என் தந்தையைப் பார்த்தாயா? அந்தச் செய்தியை நீ எனக்குச் சொல்லவே யில்லையே?"





''பார்த்தேன்; ஓலையைக் கொடுத்தேன். வாங்கி இடுப்பில் செருகிக் கொண்டார். எதையும் என்னிடம் கூறவில்லை. நேரே வஞ்சிக்குத் தான் வருவார் என்று நினைத்தேன்; இன்னும் வரவில்லை.''

''வஞ்சிக்கும் மனிதர்களைப் பார்க்க அஞ்சியே அவர் வஞ்சிக்கு வரவில்லை. அவர் இருக்கும் இடம் தெரிந்தால் நாங்களே போய்ப் பார்க்கலாம். ஆனால் அன்பு மகன் அநாதையாக வருவதைப் பார்த்தால் அவர் ஆவி நிலைக்காது. இனி இந்தச் செய்தியைக் கேட்டாலே அவர் உயிரோடிருக்க மாட்டார். மகுடம் தாங்கும் வாய்ப்பை இழந்த மகனுக்குத் தந்தையின் மரண தரிசனம் கூடக் கிடைக்காமற் போய்விடும்போலிருக்கிறது. எங்கள் துயரங்கள் எங்களுடனேயே இருக்கட்டும், நாடிழந்து, வீடிழந்து, நல்லோரையும் பிரிந்து காடு செல்லும் எங்களைப் பற்றிய செய்தி என் தந்தைக்கு எட்டவே வேண்டாம்.''

அங்கதன் மௌனியானான்.

சாவியூர்த் தாவளி தன்னை மறந்த நிலையில் கண்ணீர் வடித்து, தலை குனிந்தபடியே அமர்ந்திருந்தாள்.

ரதத்தை இழுத்துச் சென்ற புரவிகளும் அவர்கள் துயரத்தில் பங்கு கொள்வது போல் மெதுவாக நடை போடத் தொடங்கின.

சிறிது நேரம் வரை யாரும் பேசவில்லை. குதிரைகளின் குளம்படி ஓசை மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது.

கிராமியக் குரலில் கொடுந் தமிழில் தாலாட்டுப் பாடுவது போல் அங்கதன் பாடத் தொடங்கினான்.

''ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி காட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார். தந்தையின் முகத்தைக்கூட அவர் காணவில்லை.

ஓங்கி யடிக்கும் காற்றிலே அந்த விளக்கு அணைய விருந்தது.

அதைத் தாங்கிக்கொள்ளும் மனோ திடம் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு இருந்தது.

அயோத்தி அரண்மனையில் பசுக்கள் அழுதன; கன்றுகள் அழுதன; பாவையர் அழுதனர்; ஏழையர் அழுதனர்.

ஆனால் உரிமையோடு அழ வேண்டிய பறவையோ பறந்து போய் விட்டது.

ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி சீதாவிடம் வந்தார்.

'சீதா, நான் வனவாசம் செல்கிறேன். பதினான்கு ஆண்டுகளை, பதினான்கு நாட்களாகக் கழித்து விட்டு நான் திரும்பி வந்து விடுவேன். அதுவரையில் இந்த அரண்மனையில் உனக்கு எந்தக் குறைவும் இராது' என்றார்.

அதுவரையில் அழாமல் இருந்த ஜனக குமாரி விம்மி விம்மி அழுதாள்.

'ஏன் சீதா அழுகிறாய்?' என்று கேட்டார், ஸ்ரீ ராமபிரான்.

'எனது நாயகன் நாடிழந்தான் என்றோ, காடு செல்கிறான் என்றோ நான் அழவில்லை. ' நீ கவலைப் படாதே, நான் போய் வருகிறேன்' என்றானே, அந்த ஒரு சொல்லுக் காகவே அழுகிறேன்' என்றாள் ஜானகி.

'உனது மெல்லிய மேனிக்கு வனவாசம் ஏற்றதல்லவே, சீதா!' என்றார் ஸ்ரீ ராமபிரான்.

'உங்கள் பிரிவை விடக் கொடியதா வனவாசம்?' என்றாள் ஜானகி.

'காட்டிலே கொடிய மிருகங்கள் இருக்குமே' என்று கேட்டார் ராமபிரான்.

'இந்த அரண்மனையில் இருப்பதை விடவா...!' என்றாள் சீதா.

'என்னை மணந்துகொண்டதனால் தானே உனக்கு இந்தத் துயரம்?' என்று கலங்கினார், ராமபிரான்.

'வேறு எவரை மணந்திருந்தாலும் திருமணமே துயரமாகி இருக்குமே!' என்றாள் சீதா.

'மலர் கல்லிலே உறங்க முடியாது சீதா!' என்றான் ராமபிரான்.

'மரத்தை விட்டு நிழல் பிரிய முடியாதே பெருமானே!' என்றாள் சீதா.

அம்பிகை மூர்த்தியை விட்டு அகல மறுத்தாள்.

ஆதிநாயகன் ஒருபெரு மூச்சு விட்டான்.









## தேர்ந்தெடு!



பாரிஸில் ஒரு முடி திருத்தும் நிலையத்தில் நுழை வாயிலில் இரண்டு போர்டுகள் இருக்கும். ஒன்றில் 'பேசக்கூடாது' என்றும் மற்றொன்றில் 'பேசலாம்' என்றும் இருக்கும். இரண்டாவது பிரிவில் மேலும் நான்கு பகுதிகள்: 1. விளையாட்டு; 2. பொது விஷயங்கள்; 3. குடும்பத் தொந்தரவுகள்; 4. பொருளாதார நிலவரம்.

எந்தப் பிரிவை முடிவெட்டிக் கொள்பவர் தேர்ந்தெடுக்கிறாரோ அந்தப் பிரிவில் இருக்கும் முடி திருத்துபவர் அந்த விஷயத்தைப் பற்றிப் பேசுவார்.

ஜனிக் பிரஸ் ஸர்வீஸ் - முத்து

---

உயிருக்குயிரான சகோதரன் கண்ணீர் விட்டு ரதத்தின் முன் பகுதியில் நிற்க, சலனமற்ற நிலையில் ஜானகியும், ராமனும் ரதத்தில் ஏறி அமர்ந்தார்கள்.

அந்த ரதம் தண்டகாரண்யத்தை நோக்கிப் புறப்பட்டது.

நீண்ட நாட்களுக்குப் பிறகு அப்படி ஒரு ரதம் அகஸ்தீசுவரம் காடுகளை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது.''

—அங்கதன் பாடிக் கொண்டே இருக்கும்போது, மூடப்பட்ட திரைச் சீலைகளுக்கு நடுவே மார்த்தாண்ட வர்மனின் மார்பில் முகம் புதைந்து கிடந்தாள் மெல்லிளங் கோதை. அந்த ஆறுதல் அரவணைப்பில் இருவரது துயரங்களும் ஓரளவு குறைந்திருந்தன.

இது அகஸ்தீசுவரம் காடு.

சாலைகளே இல்லாத அந்தக் காட்டில் சில வண்டிகள் சென்ற தடங்கள் மட்டுமே இருந்தன.

எவரும் விதை யிடாமலும், தண்ணீர் வார்க்காமலும் இயற்கையாகவே முளைத்த மரங்கள். அனுமதி இல்லாமலே அவற்றின் மீது படர்ந்து வளைந்து கிடந்த கொடிகள்.

பறிப்பாரில்லாததால் பூமி எங்கும் உதிர்ந்து காய்ந்து கிடந்த கனிகள், சருகுகள்.

இடிப்பாரில்லாததால் மலையளவு ஓங்கி வளர்ந்த புற்றுக்கள்.

தூரெடுப்பார் இல்லாததால் சேறு நிரம்பிக் கிடந்த குட்டைகள்.

பிடிப்பாரில்லாததால் அவற்றில் பல்கிக் கிடந்த மீன்கள்.

தடுப்பாரில்லாததால் அவற்றைக் கொத்தக் கூட்டமாக வரும் நாரைகள்.

தூரத்தில் கம்பீரமான மேற்குத் தொடர்ச்சி மலையை முத்தமிட்டபடி விளையாடிக்கொண்டிருக்கும் மேகங்கள்.

மழைக்கால வெள்ளத்தால் அடிக்கடி திசை மாறும் காட்டாறுகள்.

ஆங்காங்கு காட்டு மரங்களை வெட்டிக் குடிசை போட்டபடி நாட்டு மக்களின் தொடர்பில்லாமல் வாழ்ந்த வேட்டுவக் குடிமக்கள்.

வரி கேட்போரும், வரி செலுத்துவோரும் இல்லாத அந்த சாம்ராஜ்யத்தின் சங்கீத விற்பன்னனாகத் திகழ்ந்தது மூங்கில் புதர்களில் மோதும் இளங் காற்று.

அரங்கமில்லாமலே நடமிடும் அழகுப் பாவையராகத் திகழ்ந்தன தோகைகள்.

பத்தாயிரம் வெற்றிலைகள் கொத்தாகப் பறப்பது போல் கூட்டம் கூட்டமாகப் பறந்து திரிந்தன கிளிகள்.

புதர்களின் ஓரங்களில் குட்டிகளுக்குப் பால் கொடுத்தபடி தாய்மையை வெளிப்படுத்தின மான்கள்.

அச்சமில்லை என்றாலும் கொலைகாரர்கள் பற்றிய நினைவோடு பிறந்துவிட்ட காரணத்தால் புதர்களுக்கிடையில் பதுங்கிக் கிடந்தன முயல்கள்.

கட்டிக் காக்க முடியாத பெருஞ் செல்வத்தை அடைந்து என்ன செய்வது என்று திகைக்கும் செல்வந்தனைப் போல் விழுங்க முடியாத பெரிய எலிகளை விழுங்கி விட்டு ஜீரணிக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்தன பாம்புகள்.

கண், காது எல்லாம் இருந்தும் மனிதனின் கண்ணுக்குத் தெரியாத அளவு சிறிய பூச்சிகள்.

ஒழுங்குபடுத்தப்படாத இறைவனின் சிருஷ்டியால் உலகம் எவ்வளவு நிம்மதியாக இருக்கும் என்பதற்கு அடையாளம் அந்த வனம்.

நந்தவனத்தை மனிதன் பரிபாலிக்கிறான்; அந்த வனத்தை இறைவன் பரிபாலிக்கிறான்.

பாம்புகள் கூட ஆளைப் பார்த்தே கடிக்கும் அந்த வனம், வஞ்சியை விட மரியாதைக்குரியதாகத் தோன்றிற்று மெல்லிளங் கோதைக்கு.

காட்டின் வழியே மேடு பள்ளங்களில் ரதம் ஏறி இறங்குவதை மெல்லிளங் கோதை வெகுவாக ரசித்தாள்.

கூடுகளில் இருந்த பறவைகளை வெளி வரச் செய்வதற்காக கூவை இடுவது போல் வேட்டுவர்கள் எழுப்பிய குரல் அவள் காதுகளுக்குக் கேட்டது.

''குக்கூ... குக்கூ'' என்று கூட்டமாகப் பாடும் குயிலோசையும் எழுந்தது.

அந்திபடும் நேரமாதலின் மங்கிய இயற்கை வெளிச்சத்தில் அந்தக் காடும் காற்றும், அவர்களுக்கு இதம் அளித்தன.

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை கால்ஷியம்-ஸாண்டோஸ்®



கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்-ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும். வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




**கால்ஷியம்-ஸாண்டோஸ்®**
**வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்**

CAJCS/151 TAM

'திருவேங்கடத்தான் ஸ்ரீ வல்லபன்' என்ற மகா முனிவர் தம் சீடர்களோடு வாழ்ந்த ஆசிரமத்தை நோக்கி ரதம் சென்று கொண்டிருந்தது.

அந்தி நேர பூஜையின் மணியோசை கேட்டது.

"ஓம் நமோ நாராயணா" என்ற குரல் உறுதியாகவும், கம்பீரமாகவும் ஒலித்தது.

அரண்மனை நாயகன் ஆசிரமம் நோக்கி வருவதைத் தூதர் மூலம் ஸ்ரீ வல்லபர் அறிய மாட்டார். அவர் கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். பின் பக்கம் சீடர்கள் கை கட்டிய படி நின்று கொண்டிருந்தனர். அகல் விளக்குகள் வரிசையாக எரிந்து கொண்டிருந்தன.

அங்கதன் தேரை நிறுத்த மூவரும் இறங்கினார்கள்.

மகா முனிவர் ஸ்ரீவல்லபர் மௌன ஞானியாய் இருப்பதைக் கண்டதும் கை கட்டியபடி அங்கேயே நின்றனர்.

பூஜையை முடித்து ஸ்ரீவல்லபர் திரும்பிப் பார்த்தார். அவர்கள் அவர் காலில் விழுந்து வணங்கினார்கள்.

"அரசன் ஒருவன் ஆசிரமம் நோக்கி வருவதைத் திருவேங்கட நாயகன் எனக்குக் கனவில் உரைத்தான். அவனது சாந்திக்காகவே இந்த அந்தி நேர பூஜையை நான் நடத்திக் கொண்டிருந்தேன்" என்றார் ஸ்ரீவல்லபர்.

கண்ணீர் வடித்தபடி, "நான் வஞ்சியின் வாரிசு மார்த்தாண்ட வர்மன். தம்பிரான் சுவாமிகள் எனக்கிட்ட கட்டளை தங்களைப் பார்க்கும்படி" என்றான் மார்த்தாண்ட வர்மன்.

"அறிவேன்" என்றார், ஸ்ரீவல்லபர்.

"இவள் என் மனைவி மெல்லிளங் கோதை" என்றான் மார்த்தாண்ட வர்மன்.

"அறிவேன்" என்றார் ஸ்ரீவல்லபர்.

"நான்...." என்று இழுத்தாள், சாலியூர்த் தாவளி.

"அறிவேன்" என்றார் ஸ்ரீவல்லபர்.

அவர் உரைத்த பாணியிலிருந்து அதற்கு மேல் சொல்ல வேண்டியதில்லை என்பது போலிருந்தது.

"மணி மகுடங்கள் மனிதர்களால் செய்யப் படுகின்றன. ஆகவே, அவை எந்த சிரசுக்கும் பொருந்தக் கூடியவையே! ஒரே சிரசில் அவை அமர்ந்திருந்தால், சிருஷ்டிநாயகனின் இயக்கம் புரியாமல் போய்விடும். காலங்களே சிரசுகளை நிர்ணயிக்கின்றன. நீங்கள் அடுத்த குடிலில் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்" என்றார், ஸ்ரீவல்லபர்.

மார்த்தாண்ட வர்மனும் மெல்லிளங் கோதையும், சாலியூர்த் தாவளியும் ஒரு சீடரால் அழைத்துச் செல்லப்பட்டார்கள்.

அவர்கள் ஆசிரமத்தை விட்டு வெளியேறியபோது, 'ஓம் நமோ நாராயணா' என்ற ஸ்ரீவல்லபரின் குரல் கேட்டது.

பல அர்த்தங்களைக் கொண்ட பெருமூச்சோடு எழுந்த அந்தக் குரல் தந்தை குலசேகர ஆழ்வாரின் குரல் போலவே மார்த்தாண்ட வர்மனுக்குக் கேட்டது.

இப்போது அவரும் துறவி, தானும் துறவி என்பதுபோல் அவனுக்குத் தோன்றிற்று.

பக்கத்துக் குடிலில் அவர்கள் நுழைந்தபோது ஒரு புதிய அனுபவ அரங்குக்குள் நுழைவதுபோலிருந்தது.

அங்கே ஒரு கோரைப் பாய் விரிக்கப்பட்டிருந்தது. இரண்டு அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

இரண்டே அகல் விளக்குகள்.

அரண்மனையில் எரிய முடியாத மணி விளக்குகள் — இப்போது ஆசிரமத்தில் அகல் விளக்குகள்.

அங்கே மூங்கிலினால் வனையப்பட்ட சிறிய கூடையில், நடுவிலே தாமரை இலை போடப்பட்டு, வேகவைத்த அவல் வைக்கப் பட்டிருந்தது. அதன் மீது தேங்காய்ப் பூ தூவப்பட்டிருந்தது. பக்கத்தில் ஒரு சிறு மண் கலயத்தில் பால் வைக்கப் பட்டிருந்தது.

ராஜபோகத்துக்கும் துறவறத்திற்கும் இடையே உள்ள மகத்தான இடைவெளிக்குக் கட்டியம் கூறியபடி அவை காட்சி யளித்தன.

அவர்களது ஆடைகளை உள்ளே கொண்டு வந்து வைத்த அங்கதன், அங்கே வறுமையின் கம்பீரத்தைக் கண்டு மனம் உருகி விட்டான். ஆனால் அந்தச் சூழ்நிலைக்குத் தயாராகி விட்டவர்கள் போல் மார்த்தாண்ட வர்மனும் மெல்லிளங் கோதையும் காட்சி யளித்தார்கள்.

"இருட்டிலே நீங்கள் போக வேண்டுமே. புறப்படுங்கள்" என்றாள் மெல்லிளங்கோதை, சாலியூர்த் தாவளியைப் பார்த்து.

சாலியூர்த் தாவளியும், அங்கதனும் எவ்வளவு அழ முடியுமோ, அவ்வளவு அழுது முடித்தார்கள்.

சாலியூர்த் தாவளி மெல்லிளங் கோதையைக் கட்டிப் பிடித்துக் கன்னத்திலும் நெற்றியிலும் மாறி மாறி முத்தமிட்டாள்.

ரதம் புறப்படத் தொடங்கியபோது, ஆசிரமத்திலிருந்து, 'ஓம் நமோ நாராயணா' என்ற ஸ்ரீவல்லபரின் குரல் கம்பீரமாக ஒலித்தது.

இளங்காற்று அதை எதிரொலித்தது.

**(முதற்பாகம் முற்றிற்று)**



"கறுப்புப் புடவையின் பார்டர் பிடிச்சிருக்கு. நீலப் புடவையின் தலைப்பு பிடிச்சிருக்கு. பச்சைப் புடவையின் உடல் பிடிச்சிருக்கு. எனக்குப் பிடிச்ச பகுதிகளை மட்டும் 'கட்' பண்ணித் தாங்க. நான் சேர்த்து வைக்கத் தைக்கக்கிறேன்."



"நீங்கள் தந்த டானிக் இரண்டு ஸ்பூன்கூட இல்லையே, சார்?"




"பிள்ளையார் கோயில் தெருவுக்கு வழி எப்படி?"

"'பல்லாண்டு வாழ்க' தெரு வழியாகப் போய் இடது பக்கம் 'மன்மத லீலை' சாலையில் திரும்பினால், 'வாங்க சம்பந்தி வாங்க' சந்து வரும். அதற்குப் பக்கத்தில் யாரையாவது கேட்டால் சொல்வார்கள்."










"ஆறு மாத சம்பள பாக்கி தரவேண்டிய முதலாளியிடம் நோட்டு எழுதி வாங்கிட்டு வரச் சொன்னீங்களே! ரெவின்யூ ஸ்டாம்புக்கு இருபது காசு கடன் கேட்கிறார்."



"சிலையின் கையில் தடியைக் கொடுத்துத் தடி சுழலும்படி மின்சார அமைப்பு செய்திருக்கிறீர்களே! எதற்கு?"

"காக்காயை விரட்ட வேறு வழி?"



"உங்கள் ஸ்வீட் மாஸ்டருக்காவது சம்பளத்தை ஒழுங்காகக் கொடுத்து விடுங்களேன்!....."

"ஏன்?"

"அல்வா உப்பு கரிக்குது."





திரு கைலாசம் தம்பதி

(நுங்கம்பாக்கம் நாடோஸ் சாலை ஐந்து 'ஏ' இலக்கமிட்ட வீடு. வழக்கறிஞர் பி. சிதம்பரமும் வழக்கறிஞர் நளினியும் பிரதம நீதிபதி பி.எஸ். கைலாசம் தம்பதி பற்றிக் கூறுகிறார்கள்.)

# முரசு கொட்டாத முற்போக்காளர்

நளினி: என் அப்பாவுக்குப் பிரதம நீதிபதி பதவி கிடைத்ததில் மகிழ்ச்சி. ஆனால் உள்ளூற அப்பாவிடம் எனக்கு வருத்தம் கூட உண்டு.

சிதம்பரம்: வருத்தமா? இந்த மகிழ்ச்சிகரமான வேளையிலா?

நளினி: உங்களுக்குப் புரியாது. நீங்க எங்க வீட்டுக்குப் பெண் கேட்டு வந்த நாளை நினைவுபடுத்திப் பாருங்க!

சிதம்பரம்: ஓ! அந்த நாளா? அதிலே ஒரு சுவாரசியமும் இருக்காதே! ரொம்ப இயல்பா சர்வசாதாரணமா விஷயம் முடிஞ்சுபோச்சே. இருந்தாலும் சொல்றேன். நான் அமெரிக்காவிலிருந்து எம். பி. ஏ. தேறிவிட்டு வந்து ஒரு மாதம் இருக்கும். உன்னை மணக்க வேண்டும் என்ற விருப்பத்தில் உங்கள் பெற்றோருக்கு ஒரு நாள் குறிப்பிட்டுச் சந்திக்க வருவதாகச் சொன்னேன். நானே தனியாகக் காரை ஓட்டிக் கொண்டு உங்கள் வீட்டுக்கு வந்தேன். வரவேற்பறையில் உன் தந்தையும் தாயும் அமர்ந்திருந்தனர். ஆங்கிலத்தில் 'நான் உங்கள் பெண்ணை மணந்துகொள்ள விரும்புகிறேன்' என்றேன். உன் நீதிபதித் தந்தை ஓர் ஆட்சேபமும் எழுப்பாமல் 'சம்மதித்து'த் தீர்ப்புத் தந்துவிட்டார். உன் அன்னை மட்டும் 'உங்கள் குடும்பத்தில் இந்தக் கலப்புத் திருமணத்துக்கு, இந்தக் காதல் விவாகத்துக்கு ஒப்புக் கொள்வார்களா?' என்று கேட்டார். பிறகு நம் திருமணம் ஜாம் ஜாமென்று நடந்தேறியது!

நளினி : இப்போ என் வருத்தத்துக்கான காரணத்தைச் சொல்கிறேன். என் நீதிபதி அப்பா, ஓர் ஆட்சேபணையும் சொல்லாமல் ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தக்கூட இடம் தராமல் நம் காதல் கல்யாணத்தை நிறைவேற்றி வைத்தார். இப்போ நம் காதல் நிறைவேற நான் கண்ணீர் சிந்தியதாகவோ தியாகம் செய்ததாகவோ யாரிடமும் சொல்லிப் பெருமைப் பட்டுக் கொள்ள முடியவில்லையே?

சிதம்பரம்: பெண்களின் மனசு ஆழம் காண முடியாதது என்று சும்மாவா சொல்லி இருக்காங்க! உன் அப்பா ஊருக்கு ஒண்ணு குடும்பத்துக்கு ஒண்ணு என்ற மனப்பான்மை கொண்டவரில்லையே?

நளினி: அது உண்மைதான். ஜூனியர் நடராஜன் காதல் கல்யாணத்தை நடத்தி வைத்தார். ஜூனியர்கள் பைமி — ராஜமாணிக்கம் காதல் கல்யாணம் கூடத்தான்.



மகள் நளினி.

அப்புறம் நம்ம கல்யாணத்தை முடித்துவைத்தார். டாக்டர் மாமா (ஸ்ரீமதி சௌந்தரா கைலாசத்தின் சகோதரர்) இங்கிலாந்தில் ஐரிஷ் பெண்ணைத் துணிந்து மணக்க முற்பட்டபோது ஆசீர்வாதம் தந்தார்.

சிதம்பரம்: நளினி! நீ வழக்கறிஞராக விளங்க வித்திட்டவர் உன் தந்தைதானே?

நளினி: ஆமா! ஸ்டெல்லா மேரி கல்லூரியிலே பி.எஸ்ஸி. படித்த என்னைச் சட்டக் கல்லூரிக்குப் பிடிவாதமாக அனுப்பி வைத்தார். பெண் கல்வியில் அதிக ஈடுபாடு. ஒரு நாள் கோர்ட்டுக்குப் போகா விட்டால் அவருக்குக் கடும் கோபம் வந்து விடும்! இந்தக் கண்டிப்பான தந்தையிடம் மனம் விட்டு அரசியலிலிருந்து வீட்டுச் சமையல் வரை எந்த விஷயத்தைப் பற்றியும் விவாதிப்பேன். பெண்களுக்குச் சம உரிமை கொடுக்கணும் என்ற அவரது பரந்த மனப்பான்மையே என் அன்னை இலக்கிய உலகில் புகழ் பெற்று விளங்குவதற்குக் காரணம். அவருக்கு அவளிடம் Jealousy இல்லே! சில ஆண்கள் குழந்தைகளுக்குப் பூர்ண சுதந்திரம் கொடுப்பாங்க! மனைவியை அடுப்பங்கரையை விட்டுச் செல்ல அனுமதிக்க மாட்டாங்க. என் அன்னை சென்னை சர்வகலாசாலை செனட் சபையிலும், சென்ஸார் போர்டிலும் பணியாற்றத் தைரியமாக முன்வந்ததற்கு என் தந்தையின் பூரண ஒத்துழைப்பே அடிப்படை.

சிதம்பரம்: நீதிமன்றத்தைப் பொறுத்த வரை என் மாமனார் பொறுமைசாலி என்று பெயர் வாங்கியவர். மிஸா வழக்குகளை விசாரிக்கும்போது கள்ளக் கடத்தல், கலப்படக்காரர்களுக்குக் கடுமையான நீதிபதி. 'புதுமைத் தீர்ப்பு' என்று சொன்னால் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் பற்றிய விசாரணைக் கமிஷனை எடுத்துக் கொள்ளலாம். விசாரணைக் கமிஷன் முன்னால் இறந்த மாணவனின் தாயார் வழக்கறிஞர் வைத்துச் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்ய உரிமை கோரினார். இந்த உரிமை உண்டா — விசாரணைக் கமிஷன் முன் என்று பிரச்னை எழுந்தது. உரிமை உண்டு என்ற தீர்ப்பளித்தார் நீதிபதி ஸ்ரீ கைலாசம். இயற்கை நீதிக் கோட்பாடுகளை விரிவடையச் செய்த தீர்ப்பு. 'இன்டர் நேஷனல் கமிஷன் ஆப் ஜூரிஸ்ட்ஸ்' என்ற உலக ஸ்தாபனத்தின் அதிகாரபூர்வமான வெளியீட்டில் இந்தத் தீர்ப்பைச் சட்ட முற்போக்கான தீர்ப்பு என்று விமரிசித்திருக்கிறார்கள்.

வழக்குகளில் குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டவனுக்குத் தண்டனை கொடுப்பது மட்டும் போதாது; பாதிக்கப்பட்ட குடும்பத்துக்குக் கஷ்ட நிவாரணம் அளிக்க வேண்டும். கொலை செய்த குற்றவாளி நஷ்ட ஈட்டைப் பாதிக்கப்பட்ட குடும்பத்துக்குத் தர வேண்டும். பல காலம் இந்தச் சட்டம் சட்டப் புத்தகத்தில் உறங்கிக் கொண்டிருந்தது. அதற்கு விழிப்பூட்டிப் பிரயோகித்தவர் என் மாமனார்.

நளினி: காலையில் ஐந்து மணிக்கு எங்கள் வீட்டு டெலிபோன் இரண்டு முறை ஒலித்தால் என் அப்பாவின் நண்பர் 'வாக்கிங்' புறப்பட்டு விட்டார் என்று அர்த்தம்! என் தந்தை அவரோடு அல்சேஷன் நாய் பின்தொடர 'வாக்கிங்' சென்று விடுவார்.

சிதம்பரம்: என் மாமனார் காஸ்மாபாலிடன் கிளப் தலைவர். தீவிர உறுப்பினர். பதினைந்து வருஷங்களுக்கு முன்வரை டென்னிஸ் ஆடி வந்தார். இப்போது கிரிக்கெட், டென்னிஸ் மாட்ச் பார்ப்பதோடு நிறுத்திக் கொள்கிறார். குடும்பத்தோடு காமென்டரி கேட்பதிலும் ஈடுபடுவார்.

நளினி: என் அம்மாவுக்கு முருக பக்தி; என் தந்தைக்குத் திருப்பதி வேங்கடாசலபதி பக்தி!

சிதம்பரம்: என் மாமனாருக்கு லைப்ரரி இயக்கத்தில் ஈடுபாடு அதிகம். லைப்ரரி சயன்ஸ் நிபுணர் ரங்கநாதன் இவரது இனிய நண்பர். பிரிட்டிஷ் கௌன்ஸிலிருந்து நிறைய நாவல், சிறுகதைப் புத்தகங்களை எடுத்து வந்து படிப்பது அவரது பொழுது போக்கு.,

பேரன் கார்த்திக்: என்னிடம் தாத்தாவுக்குக் கொள்ளைப் பிரியம்! எனக்குப் பெல்ட் கூட வாங்கிக் கொடுத்திருக்கிறார்! என் பாட்டியை நான் 'அம்மாயி' என்றுதான் அழைப்பேன்!

சிதம்பரம்: நளினி! உன் அப்பாவோடு கோர்ட்டுக்குக் காரில் செல்கிறாயே, பிரதம நீதிபதியான *பிறகு ஏதாவது மாறுதல் தென்படுகிறதா?

நளினி: எனக்கொன்றும் மாறுதல் தெரியவில்லை. பிரதம நீதிபதிக்குரிய கொடியைக் கூடக் காரில் பறக்க விட வேண்டாம் என்று அப்பா சொல்லிக் கொண்டிருக்கிறார். தம் வீட்டில் 'பாதுகாப்பு' கூட வேண்டாம் என்று சொல்லிவிட்டார்!

சிதம்பரம்: இலக்கிய சிந்தனை விழா நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்க வேணும். நான் வருகிறேன்!

(போர்டிகோவிலிருந்து கார் புறப்படுகிறது. இன்முகத்துடன் கணவருக்கு விடை அளிக்கிறார் வழக்கறிஞர் நளினி. கார்த்திக்கும் தந்தைக்கு 'டாடா' காட்டுகிறான்! முற்போக்கான சிந்தனைகளை முரசறைந்து அறிவிக்காமல் முன்னுதாரணமாகத் திகழ்ந்து காரியத்தில் நிறைவேற்றி வைத்துள்ள ஓர் அமைதியான அறிஞரைப் பற்றி நிறையத் தெரிந்து கொண்ட மகிழ்ச்சியில் நாமும் விடைபெறுகிறோம். - பி.எஸ்.எம்.)



மருமகன் சிதம்பரம்











இந்த இரண்டு வருடங்களில் தன்னைப் 'பெண் பார்க்க' வந்த ஆறு பிள்ளைகளை அம்மு தூக்கி எறிந்து விட்டாள். தாயார் சாரதா ஒரு பிறவி சாது. யாரையும் கடிந்து கொள்ளக்கூடத் தெரியாத அவளால் அம்முவைக் கண்டிக்க முடியவில்லை. அப்பா அனந்தராமனுக்கு அம்மு செல்லப் பெண். உள்ளூறப் புலம்பிக் கொண்டே அவர் ஏழாவது பிள்ளைக்காகப் பிரயத்தனம் செய்தார்.

எனக்கு அவர்கள் இரண்டு பேரையும் பார்த்த போது பரிதாபமாக இருந்தது. அனந்தராமன், கணபதி உயர்நிலைப்பள்ளியில் பூகோள ஆசிரியர். வீட்டின் முன் பகுதி அறைக்கு நான் மாதாமாதம் கொடுக்கிற அறுபது ரூபாயையும் சேர்த்துச் சொன்னால், மாத வரும்படி ஐந்நூற்றைக் கூட எட்டாது. மதமதவென்று காட்டுச் செடி போல் வளர்ந்து பூத்துக் குலுங்கும் சிரிப்போடு ஒரு கந்தர்வப் பெண் போல் வீட்டினுள்ளேயே திரியும் அம்முவை எப்படியாவது ஒரு நல்ல வரனுகைப் பார்த்து ஒப்படைக்க வேண்டும் என்று இராத் தூக்கம், பகல் தூக்கம் இல்லாமல் அனந்தராமன் கவலைப்படுகிறார். அம்முவின் அழகையும் கவர்ச்சியையும் பார்த்த எத்தனையோ சாலப்புறம் இள வட்டங்கள் சொப்பனங்கள் பார்த்துத் தீர்த்தனர். ஒரு சிலர் அவளைத் தரிசனம் செய்ய வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக என் சிநேகிதத்தைப் பிடித்துக் கொண்டு என்னைப் பார்க்க வருவது போல் நடித்திருக்கின்றனர்.

இந்த இரண்டு ஆண்டுகளில் நான் அம்முவுடன் பல முறை பேசியது உண்டு. என்னைப் பொறுத்த வரையில் அவள் வீட்டுக்காரரின் மகள்தான். நான் குடித்தனக்காரன் தான். அவளுடைய அழகும் இளமையின் பூரிப்பும் நான் வந்து சேர்ந்த அன்றே என்னைக் கவ்வி இழுத்து நிலை கொள்ளாமற் செய்து விட்டது. ஆனால் நான் என்னையே அடக்கிக் கொண்டேன். இதற்குக் காரணம் அந்த ஏழைக் குடும்பம் என்னைக் கண்டு பயந்து ஒதுங்கிக் கொண்டதுதான். சாதாரணக் குமாஸ்தாக்களிலும் வரன் தேடும் அனந்தராமன் ஆயிரம் ரூபாய் சம்பாதித்து, ஸ்கூட்டரில் திரியும் என்னைக் கண்டு பயந்தார். சென்னையில் இரண்டு வீடுகள் சொந்தமாக இருக்கின்றன. தந்தை ஒரு பெரிய வக்கீல் என்ற விவரங்கள் — என்னையும் ஒரு வரனுகக் கருத, அவருக்குத் தைரியம் கொடுக்கவில்லை.

இந்த ஆறாவது வரன் பார்க்க வருவதற்கு இரண்டு நாட்கள் முன் தான் அனந்தராமன் என்னிடம் வந்தார்!

''ராகவன்! நான் ஏற்கனவே இருநூறு ரூபாய் உங்களுக்குத் தரணும். இன்னும் ஒரு நூறு ரூபாய் இருக்குமா?''

'எதற்கு' என்று கேட்காமல் எடுத்துக் கொடுத்தேன்.

''நாளன்னிக்கு அம்முவைப் 'பெண்' பார்க்க வருகிறார்கள். ரயில் சார்ஜ் அறுபது ரூபாய் கொடுக்க வேணும். அதைத் தவிர வீட்டுச் செலவு வேறு!'' என்றார் அவர்.

''இந்தத் தடவையாவது அம்மு சரின்னு சொல்லணும்'' என்றேன்.

''எல்லாம் குருவாயூரப்பன் கையில் இருக்கிறது'' என்றார் அவர்.

அவர் போன சில நிமிடங்களிலெல்லாம் என் அறைக்கு வெளியே வந்து நின்றாள் அம்மு. எண்ணெய் தேய்த்துக் குளித்த தலையை, ஈரிழைத் துண்டில் பொதிந்து பந்தாக்கி இருந்தாள். இரு கன்னங்களிலும் மஞ்சளின் பிரகாசம். கண்களில் ஓர் ஒளி. புன்னகை மூடிய உதடுகளில் குறும்பு.

''சார், மிஸ்டர் ராகவன் சார்!''

''இதோ!'' அறையை விட்டு வெளியே வந்தேன்.

''அப்பாவுக்கு எத்தனை ரூபாய் கொடுத்தீர்கள்?''

''அதுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம் அம்மு?''

''நீங்கள் எத்தனை கொடுத்திருந்தாலும் சரி. அது என்னு.''

''ஏன் துக்கிரியாட்டம் பேசறே?''

''நீங்க இந்த அறைக்கு வந்து எத்தனை வருஷமாகிறது?''

''ரெண்டு!''

''உங்க கண் முன்னுலே ஐந்து பிள்ளைகளை வேண்டாம்னு சொல்லியிருக்கேன். இது ஆறாவது பிள்ளை...''

''பார்க்கிறதுக்கு முன்னுடியே தீர்மானம் செய்யறதுன்னு ஏன் பெண் பார்க்க ஏற்பாடு செய்யணும் அம்மு.''

''ஏற்பாடே வேண்டாம்னு நான் கல்யாணம் செய்துக்கவே போறதில்லேன்னு அம்மா



நினைப்பா ... அப்புறம் அவள் 'ஓ'வென்று அழ ஆரம்பிப்பாள்.''

''அதுக்காகப் பிள்ளைகளை வரவழைச்சு மட்டம் தட்டறதா?''

''என் மனசுக்கும் கண்ணுக்கும் பிடிச்ச பிள்ளை வந்தால் நான் ஏன் மட்டம் தட்டப் போறேன்? எங்க அப்பா குருவாயூரப்பனை நம்பற மாதிரி நானும் நம்பறேன்... ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் என் மனசுக்குப் பிடிச்ச பிள்ளை வரத்தான் போறான்.''

'' ஓகே, அம்மு ! அவன் வரட்டும். ஆனால் அவனுக்கு உன்னைப் பிடிக்காமல் போயிட்டா ?''

''அவனுக்குக் கண்ணு பொட்டைன்னு அர்த்தம் .... என் நாராயணீயத்தைக் கேட்டு விட்டு, அது பிடிக்காமப் போனா காது டமாரம்னு அர்த்தம் !''

''உன் மனசிலே நீ ரம்பை திலோத்தமை என்ற நினைப்பா, அம்மு? இல்லே, நீ பாடறது கந்தர்வ கானம்னு நினைக்கிறியா? இதோ பார், உன் அப்பா அம்மா வர வர ரொம்பக் கவலைப்படறா. நீ இப்படியே வந்த பிள்ளைகளையெல்லாம் ஒதுக்கிக் கொண்டே போனால் கடைசியில் உன் தலை நரை விழுந்து விடும்.''

''அப்போ தலைநரைச்ச பிள்ளையா வருவான். நான் இப்போது எதுக்கு வந்தேன் தெரியுமா?''

''தெரியாது.''

''உங்களுக்குப் புத்திசாதுரியம், மூளை, சிந்திக்கிற சக்தி, தைரியம் ஏதும் இடையாதுன்னு சொல்லத்தான். சொல்லி விட்டேன். போறேன்.''

நான்கைந்து நாட்கள் சென்றன. சமூக மடத்தில் மஞ்சக்குடியின் ராமாயணம். மடம் நிரம்பி வழிந்தது. அம்முவும் அவளுடைய தாயாரும் பெண்கள் பகுதியில் கூட்டத்தைச் சமாளித்துக் கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

''டேய் அதோ அம்மு!'' என்றான் எனக்கு அருகே சுவரில் சாய்ந்து கொண்டு நின்ற ஓர் இளைஞன்.



பேசிவிட்ட வார்த்தை, தொடுத்துவிட்ட அம்பு, கடந்துவிட்ட காலம், இழந்துவிட்ட வாய்ப்பு — இந்த நான்கையும் திரும்பப் பெற முடியாது.

இபின் ஆல் அலீஃப் — ராமு

---

''பார்த்தாச்சடா'' என்றான் அவனுடைய சிநேகிதன்.

''போன வாரம் ஒருத்தன் பார்த்துட்டுப் போனான். பாவம் அம்மு!''

''ஏண்டா!''

''வேண்டாம்னு சொல்லிட்டானாம்!''

''ஏன் அழகாத்தானே இருக்காள்!''

''உனக்குக் கதை தெரியாது போலிருக்கு. அவளுடைய வீட்டு வாசல் அறையிலே ஒரு மெட்ராஸ் ரௌடி குடியிருக்கிறான் தெரியுமா?''

''நான் பார்த்ததில்லையே.''

''நானும் பார்த்ததில்லே. அவனால் தான் அம்மு கல்யாணம் தள்ளிக் கொண்டே போகிறது. பாவம், அனந்தராமன்! பணத்துக்கு ஆசைப்பட்டு ....''

அடுத்த கணம் நான் மெதுவாக நழுவினேன், அந்த இடத்தை விட்டு. அம்முவின் மீது எழுந்திருக்கும் அபவாதம், அனந்தராமனுடைய குடும்பத்தின் மீது தோன்றியிருக்கும் அவமானம் இதற்கெல்லாம் காரணம் யார் என்று தெரிந்த போது எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. என்ன ஊர், என்ன உலகம்! பொய்மையே உண்மையாக்கி, ஒரு குடும்பத்தையே, ஒரு பெண்ணின் எதிர்காலத்தையே சூறையாடுகிறார்களே!

வீட்டை அடைந்த போது, அனந்தராமன் கை விசிறியால் விசிறிக் கொண்டே திண்ணையிலேயே நடப்பதைக் கண்டேன்.

''யார் ராகவனா? ஏன் பிரவசனம் கேட்கலையா? ''

''மனசு லயிக்கவில்லே, சார். நான் வந்ததே உங்களைப் பார்த்துப் பேசத்தான்.''

''முந்நூறு ரூபாயை அடுத்த மாசம் எப்படியாவது திருப்பித் தந்துவிடுகிறேன் ராகவன்!''

''உங்க பணத்தைக் குப்பையில்போடுங்கள் சார். யார் அதைப் பத்திக் கேட்க வந்தார்கள்? நான் இன்னிக்கே அறையைக் காலி பண்ணறேன்....''

''ஏன் ராகவன், என்ன நடந்து விட்டது?'' அவருடைய அலறலில், உடல் நடுக்கத்தில் கை விசிறி கீழே விழுந்தது.

''இனிமேலும் ஒன்றும் நடக்காமலிருக்கத் தான் நான் இப்போ அறையைக் காலி பண்ணறேன். ஆனால் ஒன்னு. என் பெட்டிகளில் ஒன்று மட்டும் இங்கே இருக்கும். மாசாமாசம் வாடகை வந்து விடும்!''

திடீரென்று அனந்தராமனுக்குக் கோபம் வந்தது. வார்த்தைகளில் ரோஷம் பீரிட்டது.

''நீங்கள் அறுபது ரூபாய் தர்மம் செய்ய வேண்டாம் சார். ஆனால் என்ன காரணத்துக்காகக் காலி செய்கிறீர்கள் என்று சொல்லுங்கள்.''

''நான் இங்கே இனிமேலும் தொடர்ந்து இருந்தால், உங்கள் அம்முவின் கல்யாணம் நடக்காது.''

''பேத்தல். அவன்தானே வந்த பிள்ளைகளை யெல்லாம் தூக்கி எறிகிறான்?''

''அது உங்களுக்குத் தெரியும்; எனக்குத் தெரியும். ஆனால் இந்தச் சாலப்புறத்திலே என்ன பேசிக் கொள்கிறார்கள் தெரியுமா?''

''தெரியும். நீங்கள் ரொம்பப் பாவம் ராகவன். உங்க காதிலே இன்னிக்குத் தான் ஊராரின் வம்புப் பேச்சு விழுந்திருக்கு போலிருக்கு !''

''அப்போ?''

''கல்யாண வயசிலே ஒரு பணக்காரப் பிள்ளையைக் குடி வைத்திருக்கிறவருடைய பெண்ணுக்குக் கல்யாணம் ஆகாமலிருக்கக் காரணம், பெண்ணின் நடத்தையும் அவள் அப்பன் அதுக்கு உடந்தையாக இருப்பதும் தான். இதைத் தானே ஊரார் பேசிக் கொண்டு இருக்கிறார்கள்? என் காதில் இது என்னிக்கோ விழுந்தாகி விட்டது.''

''அம்முவுக்கும் அவள் அம்மாவுக்கும் தெரியுமா?''

''தெரியும். நானே சொல்லியிருக்கேன். உண்மை எதுன்னு எங்களுக்குத் தெரிஞ்சிருக்கிற போது நாங்கள் ஏன் பயப்பட வேண்டும்?''

''சார்! இந்தக் காலத்தில் வெறும் உண்மைக்கும் சத்தியத்துக்கும் மதிப்பு கிடையாது! பொய்க்கும் பித்தலாட்டத்துக்கும் தான் மதிப்பு!''

''எனக்குக் குருவாயூரப்பன் இருக்கான்.''

''இப்படியே சொல்லிக் கொண்டிருங்கள்.'' என்று சொல்லி விட்டு, அறையைக் காலி பண்ண ஆயத்தமானேன்.

எல்லாச் சாமான்களையும் ஒழுங்காக வைத்து விட்டு ஓர் ஆட்டோ ரிக்ஷாவைக் கொண்டு வரலாம் என்று புறப்படுகையில், தந்திக்காரர் படியேறி வந்தார்.

தந்தி எனக்கு.

அதை உடைத்துப் பார்த்தபோது ஏற்பட்ட அதிர்ச்சியில் நான் சுவரோடு சுவராய்ப் போய்விட்டேன்.

''அம்மாவும் நாளும் நாளை மெயிலில் வருகிறோம். பெண் பார்க்கத் தயாராக இரு!''

கடந்த ஓர் ஆண்டு காலமாகவே அம்மாவும் அப்பாவும் என் கல்யாணத்துக்காகத் துடிக்கிறார்கள். நான்தான் ஏதேதோ காரணங்களைச் சொல்லித் தட்டி வந்தேன். என்றாவது ஒரு நாள் அனந்தராமன் அம்முவை எனக்குக் கொடுக்க முன்வருவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவர் என்னை முன் பக்கத்து அறையில் வைத்துக் கொண்டே மற்ற ஊர்களில் வரன் தேடினார். இந்தக் காலத்தில் ஏழை பணக்காரர் பேதங்கள் இல்லை என்று நான் அவரிடம் பேச்சுவாக்கில் சொன்னதை அவர் ஒரு தத்துவமாக எடுத்துக் கொண்டாரே தவிர, நான் சொல்வதன் தாத்பரியத்தையோ, காரணத்தையோ புரிந்து கொள்ளவில்லை.

''சார்!'' என்றேன்.

ஏற்கனவே என் கையிலிருந்து நழுவி விழுந்திருந்த தந்தியை எடுத்துப் பார்த்துவிட்டு

அனந்தராமன், ''ரொம்ப சந்தோஷம், ராகவன்!'' என்றார்.

''எனக்குத் தெரியவே தெரியாது சார்... நான் பெண் பார்க்கப் போறதில்லே.''

'' சார்! நீங்கள் அம்முவுக்காகவாவது பெண் பார்த்துக் கல்யாணத்தையும் செய்து கொள்ளுங்கள்!''

அவர் சொல்வதன் அர்த்தம் புரிந்தது. எனக்குக் கல்யாணமாகி விட்டால், என்னால் பிறந்த அபவாதம் நாளடைவில் இல்லாமல் போய்விடும். ஒருவேளை ஒரு பிள்ளையை அம்முவுக்குப் பிடித்து இந்த அபவாதம் காரணமாகப் பிள்ளை வீட்டார் உண்மை யாகவே அம்முவை ஒதுக்கி விட்டால்?

''ஓ. கே. சார்... நாளை வரையில் இங்கே இருக்கப் போகிறேன்.''

''சந்தோஷம்!'' என்றார் அனந்தராமன்.

அன்றிரவு அவர் தம் வீட்டிலே என்னைச் சாப்பிடச் சொன்னார். அம்முவும் சாரதாவும் பரிமாறினார்கள்.

சாப்பிட்டபின் கூடத்துக்கு வந்தபோது, அம்மு தாழ்ந்த குரலில் கேட்டுக்கொண்டாள். ''தயை செய்து, நாளைக்குப் பெண் பார்த்த பின், 'பெண்ணைப் பிடிக்கவில்லே' என்று சொல்லி விடாதீர்கள்.''

''புரிகிறது, அம்மு. ஆனால் பெண் உன்னைப் போல் ஒருத்தியாக இருந்தால் பிள்ளையை ஒதுக்கலாம் இல்லையா?''

''அப்படி நடக்காது... குருவாயூரப்பன் இருக்கான்.''

அனந்தராமனும் அவருடைய மனைவியும் இன்னும் வீட்டின் பின்கட்டிலேயே இருந்தார்கள்.

''அம்மு!''

''உம்!''

''வந்ததிலேயிருந்து எனக்கு உள்ளூற ஓர் ஆசை இருந்தது.... ஆனால் அதை வெளியே சொல்லத் தைரியமும் இல்லே, சந்தர்ப்பமும் இல்லாமல் போய் விட்டது.''

''என்ன ஆசைன்னு எனக்குத் தெரியும். ஏன் வெளியே சொல்லத் தைரியம் இல்லேன்னு தான் தெரியாது.''

''நான் வந்த ஆறு மாதத்திலே நீ இரண்டு பிள்ளைகளை மறுத்து விட்டாய்.... இரண்டு பேரும் கண்ணுக்கு லட்சணமா இருந்தார்கள். நல்ல படிப்பும் படித்திருந்தார்கள். அவர்களுக்கே இந்தக் கதின்னு என் 'பெர்ஸனாலிடி'க்கு என்ன சான்ஸ் என்று எனக்குத் தைரியம் இல்லாமல் போய்விட்டது.''

'' 'பெர்ஸனாலிடின்னு என்ன? ஒரு பெண்ணுக்கு எந்தெந்த விதமான 'பெர்ஸனாலிடி'யைப் பிடிக்கும்னு உங்களாலே நிச்சயமாகச் சொல்ல முடியுமா?''

''முடியாது.''

''நீங்க தைரியமா அன்னிக்கே உங்கள் ஆசையை வெளியிட்டிருந்தீர்களானா, மேற்கொண்டு நாலு பிள்ளைகள் பார்க்க வந்திருக்க மாட்டார்கள். ஊர்ப் பேச்சும் அபவாதமும் இருந்திராது... உங்களுக்கு இனிமேலும் புதுசாத் தைரியம் பிறக்கும்னு எனக்குத் தோணலே... அதனாலே... அதனாலே....''

அம்மு தொடரவில்லை.

''அதனாலே?''

''தைரியத்தை நான் வரவழைத்துக் கொண்டு உங்க அம்மாவுக்கு நானே கடிதாக எழுதினேன். நம்ம கதையை யெல்லாம் எழுதினேன்.''

''எப்போ?''

'' ஆறாவது பிள்ளையை வேண்டாம்னு சொன்னப்புறம் எனக்கே அலுத்துப் போச்சு. எழுதினேன்....''

அவள் சிரித்தாள்.

''அப்பாவுக்குத் தெரியுமா?''

''தெரியாது. ஆனால் அம்மாவுக்குத் தெரியும். அம்மாவுக்குத் தெரியாம நான் எந்தக் காரியமும் செய்யறது கிடையாது.''

''அப்போ நீ ஏழாவது பிள்ளையை நாளைக்குப் பார்க்கப் போறே!''

''உங்க கணக்குத் தப்பு!''

''ஏன்... அதுக்கும் முன்னாலே யாராவது வந்திருக்கிறார்களா?''

''நாளைக்குத்தான் நான் முதன் முதலா ஒரு பிள்ளையை — எனக்குப் பிடிச்ச பிள்ளையைப் பார்க்கப் போறேன்...!''

அவளுடைய கன்னத்தைக் கிள்ளக் கை ஓடியது. ஆனால் அடுத்த க்ஷணமே அது பின்வாங்கியது. காரணம்—

இன்னும் உண்மை தெரியாத அனந்தராமன் கூடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்!





























என்னைப் பார்த்து நெஞ்சில் தைக்கும் ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார் ஓர் ஆசாமி. ''என்ன தம்பி! ராயலசீமா பஞ்சத்திலே அடிபட்டு வந்தவன் மாதிரி இருக்கியே?'' என்றார்.

அன்று நான் பதினேழு, பதினெட்டு வயசுப் பையன். எனக்கு ரொம்ப ரோஷமாக இருந்தது. அப்போதெல்லாம் மரீனா கடற்கரை மணற்பரப்பில் சிலர் 'வாலிபால்' ஆடுவார்கள். நான் அதைப் பார்த்துக் கொண்டு நிற்பேன். விளையாட ஒரு சந்தர்ப்பம் கிடைக்காதா என்று ஏங்குவேன்.

என் எடை தொண்ணூறு பவுண்டுக்கும் குறைவு. மார்பின் அளவு முப்பது இஞ்சுக்கும் குறைவு.

திருவல்லிக்கேணியிலேயே ஒரு பகுதியில் 'சிவாஜி வியாயாம் மண்டல்' என்ற பெயருடன் ஒரு தேகப் பயிற்சிப் பள்ளி இயங்கி வந்தது. மறுநாளே அங்கே போய் என் பெயரைப் பதிவு செய்து கொண்டேன். மாதக் கட்டணம் அப்போது எட்டணாதான்.

'பாடி பில்டிங்' (Body Building) பளு தூக்குதல் ஆகிய இரண்டு பயிற்சிகளிலும் தீவிர அக்கறை காட்ட ஆரம்பித்தேன். இடையே சர்வே இலாகாவில் உத்தியோகம் கிடைத்தது. அந்த உற்சாகத்தில் நான் தேகப் பயிற்சியை விடத் தயாராயில்லை.

ஆறே மாதங்களில் என் நிறை நூற்றுப் பதினைந்து பவுண்டை எட்டியது. மார்பின் அளவும் முப்பத்திரண்டு அங்குலத்தைத் தாண்டியது.

பயிற்சிப் பள்ளியின் பெயர் 'சிவாஜி வியாயாம் மண்டல்' அல்லவா? சிவாஜியின் பெயரும் உருவமும் என் மனத்தில் பதிந்து விட்டன. பள்ளி நாடகங்களில் நான் சிறு சிறு வேடங்கள் தாங்கி நாடக மேடை ஆர்வத்தையும் வளர்த்துக் கொண்டிருந்தேன். இப்போது உடற்பயிற்சியால், உருவத்தில் மாறுதல் தோன்ற ஆரம்பித்தபோது, சிவாஜி வேடம் தாங்கி நடிக்க வேண்டும் என்ற ஆசையும் முளைவிடத் தொடங்கியது.

உத்தியோகம் மாறியது. மதுரைக் கலெக்டர் ஆபீசுக்கு வேலைக்குப் போய்ச் சேர்ந்தேன்.

பெங்களூர் உடற்பயிற்சி நிபுணரான கே.வி. ஐயரின் சீடரான புரொபஸர் எம். ஜி. சுப்பிரமணியம் மதுரையில் சற்றுப் பெரிய அளவிலேயே விரும்பி வரும் சீடர்களுக்கு உடற்பயிற்சி அளித்து வந்தார். அவர் முன் ஆஜரானேன். சில நாட்களில் புரொபஸர் நான்கு மணி நேரத்துக்கு மேலாகவே டிரில் வாங்கி விடுவார்.

1955ம் ஆண்டில் என் நிறை நூற்றி ஐம்பத்தி ஐந்து பவுண்டு. மார்பு அளவு நாற்பது அங்குலத்தை எட்டியது. இது மாத்திரமல்ல. அந்த ஆண்டில் 'ஜூனியர் மிஸ்டர் மதுரை' விருதையும் பலத்த போட்டியினிடையே பெற்று விட்டேன்.

உத்தியோகம் மீண்டும் மாறியது. திருச்சிக்கு வந்து சேர்ந்தேன். இங்கு என் அறு

பலத்தின் அடிப்படையில் நானே தேகப் பயிற்சியை விடாமல் தொடர்ந்தேன்.

காலில் சக்கரம் கட்டிக் கொண்டிருந்தேனோ என்னவோ திருச்சியை விட்டு ரயில்வே இலாக்காவில் சேர மீண்டும் சென்னைக்கு வந்தேன்.

நடிகனாக மேடை ஏறும் ஆசையில் ஏமாற்றங்கள் இருந்தாலும் மனம் தளரவில்லை. இந்த ஏக்கத்தை மறக்கத் தீவிர தேகப் பயிற்சியில் மூழ்கினேன்.

1962ம் ஆண்டில் நான் நூற்றி எழுபத்தி ஐந்து பவுண்டை எட்டியபோது என் கனவு நினைவாகும் தருணமும் எட்டிப் பார்த்தது. இடையே கத்திச் சண்டையும் கற்றுக்கொண்டிருந்தேன்.

நண்பர் ராமகிருஷ்ணன் தாம் தயாரிக்க விருந்த 'சத்ரபதி சிவாஜி' என்ற நாடகத்துக்கு என்னை சிவாஜியாகத் தேர்ந்தெடுத்தார். ஏறத்தாழ நான்கைந்து மாத காலம் ஒத்திகை நடந்தது.

1962ல் அண்ணாமலை மன்றத்தில் 'சத்ரபதி சிவாஜி' நாடகம் அமர்க்களமாக நடந்தது. ரசிகர்களிடையே நல்ல வரவேற்பு. நாடகம் முடிந்தவுடன் என் நண்பர் ஒருவர் மேடையில் குதித்து ஏறி என்னை அணைத்துக் கொண்டு, 'சத்ரபதி சிவாஜி மகாராஜ்—கீ—ஜெய்!' என்று ஆவேசம் வந்தவர் போல் குரல் எழுப்பினார்.

எனக்கு மயிர்க்கூச்சல் எடுத்தது. கண்கள் குளமாயின. அந்தக் கணத்தில் என் மனத்திரையில் மரீனாக் கடற்கரையும் 'வாலிபால்' ஆட்டமும், என்னை 'ராயல சீமா' என்று அழைத்தவரின் முகமும் மாறி மாறிப் பளிச்சிட்டன.

ராஜமய்யரின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு வத்தலக்குண்டிலே ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிகழ்ச்சியில் 1972ம் ஆண்டில் கமலாம்பாள்' சரித்திரத்தை நாடகமாக நடித்தோம். எனக்குக் கதாநாயகர் முத்துசாமி ஐயர் வேடம். காலம்சென்ற கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் ஆடுசாப்பட்டி அம்மையப்ப பிள்ளையாகத் தோன்றினார்.

நாடகத்தன்று பிற்பகலில் நாங்கள் ஒத்திகை நடத்திக் கொண்டிருந்தபோது காலம் சென்ற டாக்டர் மு. வ. அவர்கள் அதைக் கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு நாத் தழுதழுக்க, ''பொருத்தமான உடல்வாகு! அழுத்தமான, ஆனால் ஆர்ப்பாட்டமில்லாத நடிப்புத் திறன்!'' என்று என்னை வாழ்த்தினார்.

பல சாகித்திய அகாடமிகள் சேர்ந்தாற்போல விருதுகளை அள்ளிக் கொடுத்த மாதிரி மகிழ்ந்தேன்.

வாழ்க்கை அநுபவம்:

**எம். கே. மணி சாஸ்திரி**

கேட்டு எழுதியவர்: **பட்டினத்தார்.**

---



இந்தியன் பாங்கி திண்டிவனத்திலிருந்து 22 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள உப்புவேலூர் கிராமத்தைச் 'சுவீகாரம்' செய்து கொண்டுள்ளது. இந்தக் கிராமத்தில் உள்ள விவசாயிகளுக்கு ஈ.ஐ.டி. பாரி உர நிறுவனத்தாரின் கூட்டுறவோடு காலத்தில் பயிருக்கு உரம் கிடைக்கக் கடன் வசதி அளித்திருக்கிறது. சிறிது நிலம் படைத்த 484 விவசாயிகள் 1700 ஏக்கருக்குச் சிரமமின்றி உரம் கிடைத்துப் பயிர் செய்து வருகிறார்கள்.

படம்: மாடு பிடிக்கக் கடன் பெற்ற விவசாயிகள்



இந்தப் புதிய பஸ்ஸில் ஏர்கண்டிஷன் வசதியைச் செய்திருப்பது வோல்டாஸ் நிறுவனம். இறைச்சி, மீன்கள், காய்கறிகள் ஆகிய உணவுப் பொருள்களை அதன் தூய்மையும் புதுமையும் கெடாதபடி குளிர்பதனம் செய்து வெகு தூரங்களுக்கு அனுப்ப வசதியாக வான்களையும் ஏர்கண்டிஷன் செய்திருக்கிறார்கள். தென்னகத்துச் சாலைகளில் குளுகுளு பஸ்கள் ஓடும் நாள் அதிக தொலைவில் இல்லை.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி





நள வருஷமல்ல இது; அநல ஆண்டு என்கிறார்கள்.

அநல என்றால் நெருப்பு என்று அர்த்தம் என்பதாகக் காஞ்சி ஆசார்யாள் விளக்கம் செய்துள்ளார்.

தீமைகளை யெல்லாம் பொசுக்கி விடும் ஆண்டெனில் அநலவை மகிழ்ச்சியுடன் வரவேற்போம்.

சமுதாயத்தில் பல்வேறு துறைகளில் வெளிப்படையாகவும் மறைவாகவும் நிலவுகிற தீமைகளை எதிர்ப்பதில் தமிழக எழுத்தாளர்கள் என்றுமே நெருப்பாகத்தான் இருந்து வந்திருக்கிறார்கள்.

இதற்குச் சிறுகதை இலக்கியத்துறை அவர்களுக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கிறது. மனித இயல்புகளைச் சித்திரிக்கும்போதே இந்தப் பணியையும் செய்து வந்திருக்கிறார்கள்.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி அவர்களுக்கு இப் பணியைச் செய்ய மற்றுமொரு வாய்ப்பளிக்கிறது.

ஆண்டுக்கு ஆண்டு இப்போட்டியில் ஆர்வம் பெருகி வருகிறது. இந்த வருஷம் முன்னெப்போதையும்விட அதிக அளவில் இளம் எழுத்தாளர்களும் அறிமுக எழுத்தாளர்களும் அனுபவ எழுத்தாளர்களும் கலந்து கொண்டு சிறப்பிப்பார்கள் என நம்புகிறோம்.

**சரித்திர அல்லது சமுதாய நோக்குடன் விஞ்ஞான அல்லது புதுமைக் கருத்துக்களும் கதைகளில் இடம் பெறட்டும்; பழைய பாணியுடன் நவயுக நடையும் துள்ளி வரட்டும்.**

| | |
|---|---|
| **முதல் பரிசு ... ...** | **ரூ. 1,000** |
| **இரண்டாம் பரிசு ... ...** | **ரூ. 500** |
| **மூன்றும் பரிசு இரு கதைகளுக்கு தலா ரூ. 250 விதம் ...** | **ரூ. 500** |

பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 100 சன்மானம் வழங்குகிறோம்.

**முடிவு தேதி: 30-6-76**

சிறுகதைகள் கல்கியில் நாலு அல்லது ஐந்து பக்கங்களுக்கு மேற்படாமல் அமைவது நலம். பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகள் ஒட்டப்பெற்ற சுயவிலாசமிட்ட உறை அனுப்புதல் வேண்டும். போட்டியில் பங்கு பெறுவோர் தங்களைப் பற்றிய சிறு குறிப்பும் புகைப்படமும் அனுப்பலாம். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

## 29. ரசிகமணி இலக்கியம்

விண்டுரைக்கக் கவிவண்ணம்
விந்தைமணி ஒருவர்
விண்டவரைக் கொண்டாட
வைரமணி ஒருவர்

டி. கே. சி.யும் ராஜாஜியும் கல்கி மூலம் அறிமுகமாகி நட்புக் கொண்டவர்கள் என்பதை முன்பே அறிவோம். தொடக்கத்தில் இலக்கியத்தாலும் பின்னர் இதயத்தாலும் இணைந்த அவர்கள் ''இலக்கியம்'' என்ற சொல்லுக்கு உரிய இரு பொருள்களின்படி, இலக்கியத்தை ரசித்துப் போற்றிய நண்பர்களாயும், நட்பு நெறிக்கு உதாரணமான நண்பர்களாயும் விளங்கினார்கள். அந்த இணைப்பை எடுத்துக் காட்டும் வகையில் தான், அவ்விருவரும் ரோஜா மாலை அணிந்து அருகருகே அமர்ந்திருப்பதாய் உள்ள படம் ஒன்றுக்கு, ''இலக்

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



கிய நண்பர்கள்'' என்பதாகக் கல்கி தலைப்புக் கொடுத்தார்.

அந்த வண்ணப் படம், 1947ம் ஆண்டு தயாரான கல்கி பொங்கல் மலரில் வெளியாயிற்று. அதைப் பார்த்ததும் எத்தகைய உணர்ச்சியை டி. கே. சி. அடைந்தார்? கல்கியின் மனைவியாருக்கு அவர் எழுதிய கடிதம் ஒன்று அதைப் புலப்படுத்துகிறது.

(திருக்குற்றாலம் 17–1–48) மலர் வெகு அற்புதமாய் இருக்கிறது. படங்கள் வெகு அழகு....

ராஜாஜியோடு ஒரு படத்தில் என்னையும் சேர்த்து உட்கார்த்தி வைத்திருக்கிறது. ரோஜாப்பூ மாலை வேறு போட்டிருக்கிறது. ஆபத்தான காரியமே! கோபுரத்தின் உச்சியில் ஒருவனை ஏற்றி வைத்து விட்டால் அவன் பாடு எப்படி இருக்கும்? அப்படித்தான் என் பாடும் — ராஜாஜியுடன் இருப்பது விஷயமாய். கல்கி அவர்கள் ஏகுவாய்த் தூக்கி வைத்து விட்டார்கள். கையையும் எடுத்து விட்டார்கள். தலையைச் சுற்றத்தான் செய்கிறது.

அந்தப் படத்தில் இரு இலக்கிய நண்பர்களையும் இணைத்துக் காட்டியதை அடுத்து, ராஜாஜி மண்டபத்தில் நடந்த கம்பர் மகாநாட்டில், வரவேற்புரை வாசிக்கையிலும் இணைத்துச் சொன்னார் கல்கி:

இன்று இந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க இசைந்திருக்கும் ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் சென்ற நாற்பது ஆண்டு காலமாகக் கம்பரைப் படித்து, கம்பரையே நினைத்து, கம்பரைப் பற்றியே பேசி, கம்பரைப் பற்றியே எழுதி, கம்பருக்காகவே உயிர் வாழ்ந்து வருகிற பெரியார்.

புது டில்லியில் இந்தியாவின் முதல் இந்திய கவர்னர் ஜெனரலாக இன்று வீற்றிருக்கும் ராஜாஜி, எத்தகைய அறிவாற்றல் உடையவர் என்பது உலகப் பிரசித்தம். ராஜாஜி யாரைப் பற்றியும் அதிகமாகப் புகழ்ந்து பேசி விடமாட்டார்; நிச்சயமாக மிகைப்படுத்திப் புகழ்ந்துவிட மாட்டார். அப்படிப்பட்டவர் நம் ரஸிகமணியைப் பற்றி என்ன எழுதினார் என்பதை உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

''உண்மையான கவியின் தன்மை இன்னதென்பதை ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியாரிடத்தான் நான் அறிந்தேன். உண்மையான கவிதையை எப்படி அநுபவிக்கிறது என்பதையும் டி.கே.சி.யிடம்தான் நான் கற்றேன்.'' இவ்விதம் ராஜாஜி அவர்கள் எழுதினார்கள். ராஜாஜிக்குக் கவியின் தன்மையை உணர்த்திய ரஸிக சிகாமணி, தமிழுக்காகவும் தமிழ்க் கவிக்காகவும் கம்பருக்காகவுமே உயிர் வாழ்ந்து வரும் பெரியார், இந்த நாலாவது கம்பர் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க இசைந்தது நம்முடைய பாக்கியம். (9-10-48)

அந்த மகாநாட்டில் மட்டுமின்றி, கம்பன் விழாக்கள் இன்னும் பலவற்றிலும் டி. கே. சி. தலைமை வகிக்கும்படி கல்கி செய்து, தாமும் மகிழ்ந்து அவரையும் மகிழ்வித்தார்; கம்பனின் கவிப் புகழுடன், அந்தக் கவியின் இதயத்தோடு இதயமாய் இணைந்திருந்த ரசிகமணி

யின் புகழும் மேலும் மேலும் வீசிக் கமழ்வதற்குத் தம்மால் இயன்றதை எல்லாம் செய்தார். இந்த இரட்டை நோக்கத்துடன்தான், சென்னையில் க. சோமசுந்தரம் துவக்கி நடத்திக்கொண்டிருந்த கம்பன் கழகத்தில் கல்கி அக்கறை கொண்டு அதற்கு ஆதரவு அளித்தார். அந்தக் கழகத்தின் தலைமைப் பொறுப்பையும் சில வருட காலம் வகித்துப் பெரிய எடுப்பாக விழாக்கள் நடத்தினார்.

இளமைப் பருவம் முதலே கம்ப ராமாயணத்தை அவ்வப்போது படித்தவர் கல்கி. அப்படிப் படிக்கையில், சில பாடல்கள் நெருடலாகவும் பொருந்தாமலும் இருப்பதைக் கண்டு மலைத்தார்; சில சொற்கள் புரியாமலும் இசைவு கேடாகவும் இருப்பதைக்கண்டு திகைத்தார். டி. கே. சி.யுடன் பழகத் தொடங்கி அவருடைய இதய ஒலியுடன் கலந்து கம்பன் கவிதையை நுகர்ந்தபோது, கம்ப ராமாயணத்தில் இடைச் செருகல்கள் பல உண்டு என்பதையும் அசலான பாடல்களிலும் சொற் சிதைவுகளும் மாற்றங்களும் சேர்ந்துள்ளன என்பதையும் உணர்ந்தார்.

மூன்றும் தடவையாகக் கல்கி சிறை புகுந்தபோது, அவரிடம் கம்ப ராமாயண அயோத்தியா காண்டம் புத்தகம் ஒன்றை டி. கே. சி. கொடுத்தார் என்பதை ஏற்கனவே பார்த்தோம் அல்லவா? அந்தக் காண்டத்தைப் படிக்கையில், தாம் அடைந்த அனுபவம் என்ன என்பதைப் பின்னர் அவர், ''கம்பரும், நானும்'' என்ற ஒரு கட்டுரையில் வெளியிட்டார்.

அந்தக் காண்டத்தில் கிட்டத்தட்ட பாதிப் பாட்டுக்களுக்கு — இம்மாதிரி (டி. கே.சி.) குறுக்குக் குறி போட்டிருந்தார். கம்பன் பாட்டு அல்ல என்பதற்கு அது அடையாளம். மற்றப் பாடல்களில் சிற்சில வார்த்தைத் திருத்தங்கள் செய்திருந்தார்.

சிறையில் சாவகாசமாக இந்தத் திருத்தங்கள் பற்றி ஆராய்ச்சி செய்ய முடிந்தது. திருத்திய பாட்டுக்கும் அச்சிட்டபடி உள்ள பாட்டுக்கும் சில சமயம் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. இத்தனைக்கும்



- இலக்கிய நண்பர்கள்.

ஒரு வார்த்தைதான் திருத்தப்பட்டிருக்கும். ஓர் உதாரணம் தருகிறேன் :

இராமருக்குப் பட்டாபிஷேகம் என்று அறிந்ததும், அயோத்தி ஜனங்கள், ஸ்திரீ புருஷர்கள் எல்லாரும், மகிழ்ச்சிக் கடலில் ஆழ்கிறார்கள். எப்படி மகிழ்கிறார்கள் என்பதைக் கம்பர் வர்ணிக்கிறார் :

'' மாதர்கள் வயதின் மிக்கார்
    கோசலை யனைத்தை ஒத்தார் ;
வேதியர் வசிட்டன் ஒத்தார் ;
    வேறு மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார் ; அன்றுள்
    திருவினை ஒத்தாள் ; அவ்வூர்
சாதன மாந்தர் எல்லாம்
    தயரதன் தன்னை ஒத்தார்.''

அதாவது, வயது முதிர்ந்த மாதர்கள் கோசலையை ஒத்தவர்களாய், தத்தம் மகனுக்கே பட்டாபிஷேகம் நடக்கப் போவதாக எண்ணி மகிழ்கிறார்கள். இளம் பெண்கள் சீதையை ஒத்தவர்களாகி, தத்தம் கணவன் மார்பனை முடிசூட்டிக் கொள்ளப் போவது போல் ஆனந்தப்படுகிறார்கள்.... இப்படிக் கம்பர் சொல்லிக் கொண்டு போகிறார் :



- கல்கி பத்திரிகையின் முதல் இதழிலிருந்தே ரசிகமணியின் கம்பர் தரும் காட்சி தொடர்ந்தது.



**ஜப்பானிய போலீஸார் குடிகாரர்களுக்குச் சரியான தண்டனை வழங்குகிறார்கள். அதாவது குடிபோதையில் ஒருவர் உளறும் போது அதை அப்படியே டேப் ரிகார்டரில் பதிவு செய்து கொள்கிறார்கள். அவருக்குப் போதை தெளிந்ததும் அதை அவருக்கே போட்டுக் காட்டுகிறார்கள்.-பல குடிகாரர்கள் குடிக்கும் பழக்கத்தையே விட்டுவிட அத்திட்டம் உதவியது.** 'விகான்ட்'—முத்து

---

அச்சிட்ட பாடலில் முதல் வரி,

"மாதர்கள் **கற்பின்** மிக்கார்
கோசலை மனத்தை ஒத்தார்".

என்றிருக்கிறது. நேயர்களுக்கு என்ன தோன்றுகிறது?" "கற்பின்" என்பதை "வயதின்" என்று மாற்றியது ரொம்ப சரி என்று தோன்றுகிறதோ இல்லையோ? வயதானவர்கள் கோசலையையும், இளம் பெண்கள் சீதையையும் ஒத்தார்கள் என்று சொல்வது எவ்வளவு உலக இயற்கைக்குப் பொருத்தமாக இருக்கிறது. இதற்குப் பதிலாக, "கற்பின் மிக்கார்" என்று முதல் அடியில் வைத்துக் கொண்டோமானால், "வேறு மகளிர்" என்பதற்குக் "கற்பு இல்லாதவர்" என்றல்லவா அர்த்தம் கொள்ள வேண்டி வருகிறது? இது அனர்த்தமாக அல்லவா முடிகின்றது? அயோத்திமா நகரின் பெண்களைக் கற்புள்ளவர்கள் என்றும் கற்பில்லாதவர்கள் என்றும் கம்பன் பிரிவினை செய்திருப்பானா? நைடதம், சீவகசிந்தாமணி ஆசிரியர்கள்கூட அவ்வளவு பயங்கரமான பிரிவினையைச் செய்திருக்கமாட்டார்களே?

சரி, டி. கே. சி.யின் திருத்தங்களின் முக்கியத்தைக் காட்டுவதற்கு இந்த ஓர் உதாரணமே போதும். ஆனால் அவர் தள்ளிவிட்ட பாடல்களைப் பற்றி என்ன? கிட்டத்தட்ட பாதிப் பாடல்களையா தள்ளிவிடுவது? என்ன அநியாயம்? எப்படித்தான் அவருக்கு மனம் வந்தது?

நம்மில் அநேகருக்கு இது சங்கடமாய்த்தான் இருக்கும். நம்முடைய உடைமைப் பற்றுதான் அப்படிச் செய்துவிடுகிறது. வீட்டில் உள்ள கிழிந்த குடைகள் பீத்தல் முறங்கள் ஆகியவற்றைக்கூட வெளியில் எறிய நமக்கு மனம் வருவதில்லை. அப்படியிருக்க, கம்ப ராமாயணத்தில் படலம் படலமாகத் தள்ளிவிடுவது என்றால்? மனத்துக்குக் கஷ்டம் தரும் விஷயந்தான்.

ஆயினும், இதற்கும் ஓர் உதாரணம் சொல்ல விரும்புகிறேன். டி. கே. சி. திருத்திக் கொடுத்த அயோத்தியா காண்டத்தைச் சிறையில் நான் படித்ததோடு, சில நண்பர்களுக்கும் படித்துக் காட்டினேன். இராமர் வனம் செல்கிறார் என்ற செய்தியைக் கேட்டு அயோத்தி ஜனங்கள் துயருறும் கட்டம். "மன் செய்த பாவம் இது" என்கிறார்கள் சிலர். நமது "கண் செய்த பாவம் கடலிற் பெரிது" என்கிறார்கள் சிலர். "ஆளான் பரதன் அரசு" என்பவர்கள் வேறு சிலர். "கையால் நிலம் தடவிக் கண்ணீர் மெழுகுவார்" இன்னும் சிலர். இம்மாதிரி அருமையான உணர்ச்சி ததும்பும் பாட்டுக்களை வாசித்துக் கொண்டு வந்து, பின்வரும் பாட்டைப் படித்தேன் —

"கிள்ளையொடு பூவையழுத, கிளர்
மாடத்து
உள்ளுறையும் பூசையழுத, உருவறியாப்
பிள்ளை அழுத, பெரியோரை என் சொல்ல,
வள்ளல் வனம் புகுவான் என்றுரைத்த
மாற்றத்தால்."

இதைப் படித்தவுடனே, "இதென்ன மட்டமாய் இருக்கிறதே!" என்று, கேட்டுக் கொண்டிருந்த அவ்வளவு பேரும் சொன்னார்கள். இந்தப் பாட்டுக்கு டி. கே. சி. கழித்தல் குறி போட்டிருந்தார். ஆனால் வேறு சில கம்பராமாயண ரசிகர்கள் இதைப் பிரமாதமாகச் சொல்வது வழக்கமாதலால் வேண்டும் என்றே அதை நான் படித்தேன். அது வரையில் நல்ல கவிதைகளையே கேட்டுக் கொண்டு வந்தவர்களாதலால், உடனே "மட்டம்" என்று சொல்லிவிட்டார்கள்!

**(கல்கி 16-4-42)**

மூன்று மாதச் சிறை வாசம் முடிந்து வெளியே வந்த கல்கி, டி. கே. சி.யைக் கண்டதும், கம்ப ராமாயணத்திலிருந்து செருகு கவிதைகளைத் தள்ளிவிட்டு அசல் பாட்டுக்களைத் தேர்ந்தெடுத்து உடனேயே புத்தகம் போடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். டி. கே. சி.யும் அதற்கு இசைந்தார். அவர் பதிப்பித்த முதல் இரண்டு காண்டங்கள் அடங்கிய நூலைக் "கம்ப ராமாயணம்" என்ற பெயருடன், அ. லெ. நடராஜன், 1942ல், புதுமைப்பதிப்பக வெளியீடாகக் கொண்டு வந்தார். "உண்மையான கம்பன் பாட்டுக்கள்" அவை என்று அந்நூலுக்குத் தாம் எழுதிய ஆறு பக்க மதிப்புரையில் கல்கி குறிப்பிட்டார்.

அந்தப் புத்தகம் வருவதற்கு முன்னாலேயே, தமது சொந்தப் பத்திரிகையின் மூலம், ஆயிரக் கணக்கான தமிழர்கள் உண்மையான கம்பன் கவிதையை அனுபவிக்கச் செய்ய வேண்டும் என்று கல்கி ஆசைப்பட்டுத் திட்டமிட்டார். அந்தத் திட்டத்தின்படியே கல்கிப் பத்திரிகையின் முதல் இதழிலிருந்து "கம்பர் தரும் காட்சி" என்ற தலைப்புடன் டி. கே. சி. தரும் கம்ப ராமாயணக் கட்டுரைகள் தொடராக வந்தன.

# இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?

நெற்றி

கழுத்து

தோள்

கைகள்

முதுகு

வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- கு.ளுமையும் குளுமையும் தந்து, உட னடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸ ன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்த பின்பும், படுக்கும் முன்பும் உடம்பின் மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!

சந்தன மணத்திலும் கிடைக்கிறது.




**ஜான்ஸன்ஸ்***
**ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே**
**உடல் எரிச்சலை**
**நிறுத்துகிறது;**
**அரிப்பிலிருந்து**
**நிவாரணமளிக்கிறது**
**உடனடியாக.**

* Trademark © J&J 75

Johnson & Johnson*

OBM-4317/R TM

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

**தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்**
**''பாலுஸேரி பில்டிங்ஸ்'', 3, சிங்கராச்சாரி தெரு,**

**திருவல்லிக்கேணி, சென்னை — 600 005**
**தந்தி: 'EVERMANS'. போன்: 64[illegible]1194 & 843938. தபால் பெட்டி: 414**

### நீண்டகாலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகியகாலச் சீட்டுகள்

20 மாதங்கள் — 20 அங்கத்தினர்கள்

மாதம் ரூ. 30/- முதல் ரூ. 600/- வரை சந்தா

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எழுதவும்

கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயமுத்தூர்

ஸ்தாபிதம்: 1947

30 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

அந்தத் தொடர் ரசிகமணியின் உடல்நலக் குறைவினால் இடையிடையே தடைப்பட்டு, சுமார் பத்து ஆண்டுகளில் நிறைவு பெற்றது. அதை அடுத்து, வெவ்வேறு தமிழ்க் கவிஞர்களின் தனிப் பாடல்களை விளக்கங்களுடன் எழுதி உதவும்படி அவரைக் கல்கி கேட்டுக் கொண்டார். அதற்கிணங்க டி.கே.சி. எழுதி அனுப்பியவற்றைத் ''தமிழ்க் களஞ்சியம்'' என்ற தலைப்புடன், 15–6–52 இதழிலிருந்து கல்கி வெளியிட்டார். அந்தத் தொடரை அறிமுகப்படுத்தியும் அதே இதழில் குறிப்பு ஒன்றைக் கல்கி எழுதியிருந்தார். அதைப் பார்த்து டி. கே. சி. அடைந்த உணர்ச்சியை, மீண்டும், ருக்மிணி அம்மாளுக்கு அவர் எழுதிய கடிதம் ஒன்றிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்:

(திருக்குற்றாலம் 5–6–52) ''கல்கி''யில் நான் தனிப் பாடல்கள் எழுத ஆரம்பித்தது தமிழின் அதிர்ஷ்டம் என்று கல்கி எழுதுகிறார்கள். நானோ தமிழோ கம்பரோ எல்லாம் கல்கியால் ஆன காரியம் என்கிறேன். எத்தனையோ விதத்தில் என்னை உத்஛ாகப்படுத்தியும் துணை புரிந்தும் வந்திருக்கிறார்கள். இதை எல்லாம் நினைத்தால் அத்தனை அதிசயமாய் இருக்கிறது. எனக்கே நம்ப முடியவில்லை. தமிழ் உலகில் நடந்துள்ள அற்புதங்கள் அப்படி இருக்கின்றன. மந்திரவாதி தான் கல்கி....

அந்தக் கட்டுரைத் தொடர் வெளியாகிக் கொண்டிருக்கையில், ''கம்பர் தரும் காட்சி'' கட்டுரைகளின் திரட்டு, ''கம்பர் தரும் ராமாயணம்'' என்ற பெயருடன் புத்தக வடிவில் அச்சாகிக் கொண்டிருந்தது. அதன் முதற் பாகத்தின் அரங்கேற்று விழாவை, 1953 அக்டோபர் 31ம் தேதியன்று குற்றாலத்தில் நடத்துவதெனக் கல்கியும், அவருடைய வேண்டுகோளின்படி மற்ற அன்பர்களும் தீர்மானித்து, அதற்கான ஆயத்தங்களில் முனைந்தனர். அப்போது முதல் மந்திரியாய் இருந்த ராஜாஜி விழாவுக்குத் தலைமை தாங்க இசைந்தார்.

தமது நூலைக் கல்கிக்குக் காணிக்கையாக்க டி. கே. சி. விரும்பி, அவருடைய சம்மதம் கேட்டு ஒரு கடிதம் எழுதினார்.

அதற்குக் கல்கி அனுப்பிய பதில்:

(சென்னை 19–10–53) அங்கு 31ம் தேதி கம்பர் அரங்கேற்று விழாவுக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன அல்லவா? ராஜாஜி அவர்களை 31ம் தேதி வருவதற்கு ஒப்புக் கொள்ளும்படி செய்யக் கொஞ்சம் சிரமப்பட்டுப் போயிற்று. அவர்களுக்கு வருவதற்கு விருப்பம் இல்லாமல் இல்லை. தேதியைப் பற்றித்தான் தகராறு. அளவில்லாத அலுவல்களை மேலே போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

புஸ்தகத்தைச் சமர்ப்பணம் செய்யும் விஷயமாகத் தங்கள் கருத்தை அவர்களிடம் தேற்று தெரியப்படுத்தினேன். கூடவே கூடாது என்று கண்டிப்பாக ஆட்சேபிக்கிறார்கள். உண்மையான கம்பர் பாடல் பரவ வேண்டும் என்ற நோக்கமே இதனால் கெட்டுப் போகும் என்று சொல்கிறார்கள்...

இன்னும் இரண்டு வால்யூம்கள் இருக்கின்றன அல்லவா? சமர்ப்பணத்தை அவற்றுக்கு வைத்துக் கொண்டால் போகிறது...

இதைக் கண்டு டி. கே. சி. எவ்வளவு ஏமாற்றம் அடைந்திருப்பார் என்பதைச் சொல்ல வேண்டியதே யில்லை. கல்கியின் கடிதப்படியே நடந்துகொள்ள வருத்தத்துடன் அவர் முடிவு செய்தார். ஆயினும் ஏற்கனவே சமர்ப்பணப் பக்கம் சேர்க்கப்பட்டு பைண்ட் ஆகியிருந்த சில பிரதிகளில் ஒன்றை அவர் கல்கிக்கு அனுப்பி வைத்தார்:

அதை ஏற்றுக் கல்கி எழுதிய கடிதம்:

''கம்பர் தரும் ராமாயணம்'' என்னும் கலைப் பொக்கிஷம் கிடைத்தது. ஒரு நாள் பால காண்டமும் இன்னொரு நாள் அயோத்

---

## நெஞ்சை விட்டு நீங்காத காட்சி



திரு எம். ஜி. ஆர். நடித்த ''நீதிக்குத் தலை வணங்கு'' என்னும் திரைப் படத்தில் உங்கள் **நெஞ்சை விட்டு நீங்காத காட்சி** எது என்று குறிப்பிட்டுச் சுருக்கமாக ஒரு தபால் கார்டில் எழுதியனுப்பவும். 22-4-76 தேதிக்குள் கிடைக்கும் கடிதங்களை மட்டுமே பரிசீலிப்போம். எந்தக் காட்சி அதிகமான வாசகர்களின் மனத்தைக் கவர்ந்துள்ளதோ அந்தக் காட்சி பற்றி டைரக்டர் திரு ப. நீலகண்டன் தம் அனுபவங்களைக் கல்கி நேயர்களுடன் பகிர்ந்து கொள்வார்.

தியா காண்டமும் ஒரே மூச்சில் படித்து முடித்தேன். வாழ்நாளெல்லாம் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டே இருக்கலாம். வாழ்க்கையை ஆனந்தமாய்க் கழிப்பதற்கு வேறு ஒன்றுமே தேவை இல்லை. படிக்கும் போது தாங்கள் எதிரில் அமர்ந்து பாடலைப் பாடிக் காட்டுவது போலவே தோன்றுகிறது. தங்களை அடிக்கடி பார்க்க முடியவில்லையே என்ற குறையும் நீங்கி விடுகிறது.

புத்தகம் வெகு அழகாக அமைந்திருக்கிறது. தமிழுக்கு வெறும் யோகம் என்று சொன்னால் போதாது. சகட யோகம், சக்கிரதசை என்றெல்லாம் சொல்லி மகிழ வேண்டும்.

சமர்ப்பணம் பக்கத்தைப் பார்த்தேன். அதன் வாசக அமைப்பும், பின்னால் ததும்பி நிற்கும் அன்பு நிறைந்த இதய ஒலியும் பரவசமாக்கின. நானும் என் குடும்பத்தாரும் இந்தப் பிரதியை விலையில்லாத அருஞ்செல்வமாக வைத்துப் போற்றிப் பாதுகாத்து வருவோம். அதுவே போதுமானது...

இன்றைக்கே புறப்படலாம் என்று பார்த்தேன். முடியவில்லை. 31ம் தேதி, கல்யாணத்துக்கு வரும் விருந்தாளி போல்தான் நானும் வந்து சேரும்படி இருக்கிறது.

ஆனால், விருந்தாளி போல் கூட அவர் போக முடியாதபடி ஆஸ்துமா நோயின் இழுப்பில் அவர் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். தம்மை முதன் முதலாக இலக்கியப் படைப்பாளர் எனப் பாராட்டிய ரசிகமணி, தம்மை ஒரு மேதாவி எனக் கொண்டாடிய அறிஞர், தேனருவியைப் போல் தம்மீது அன்பைப் பொழிந்த வள்ளல் — அவருக்காக நடக்கும் விழாவில் தாம் கலந்து கொள்ள முடியவில்லையே என்று சென்னையில் கல்கி தவித்துக் கொண்டிருக்கையில், அங்கே குற்றாலத்தில் விழா நாயகர், எத்தனையோ அன்பர்களின் முகங்களுக்கு மத்தியில் தனியொரு முகத்தைக் காணவில்லையே என ஏங்கிக் கொண்டிருந்தார்.

விழா ஆயத்தங்களில் பெரும் பங்கு கொண்ட பி. சி. சுப்பராஜா, சேது மாளிகைத் தோட்டத்தில் எழுப்பியிருந்த அலங்காரப் பந்தலில் புத்தக அரங்கேற்றம் நடந்தது. ராஜாஜிக்குப் பக்கத்தில் டி. கே. சி. காரில் அமர்ந்து ஊர்வலமாய் விழாப் பந்தலுக்குச் சென்றார். கொத்தமங்கலம் சுப்பு கடவுள் வாழ்த்துப் பாடினார். வரவேற்புக் குழுவின் தலைவர் கே. வி. ஏஎல். எம். ராமநாதன் செட்டியார் நல்வரவு கூறினார். பிறகு பொன்னாடை ஒன்றை ராஜாஜியிடம் கொடுத்து அதை ரசிகமணிக்கு அணிவிக்கச் செய்தார்.

கல்கி எழுதியிருந்த வாழ்த்துப் பத்திரத்தைக் கல்கி நிறுவனத்தின் சார்பில் பகீரதன் வாசித்தளித்தார். கல்கி மானேஜிங் டைரக்டர் சதாசிவம் மதுரையிலிருந்து கொண்டு வந்திருந்த பெரிய மலர் மாலையை ரசிகமணிக்குச் சூட்டினார்.

பலருடைய பாராட்டுக்களை அடுத்து, ராஜாஜி தலைமை உரை நிகழ்த்துகையில் ''கம்பர் கவி அழகை எடுத்துக் காட்டுவதற்கு டி. கே. சி.யை அடைந்திருப்பது நாம் செய்த பாக்கியம்'' என்று கூறினார். ''கம்பர் தரும் ராமாயணம் தமிழ் மக்களின் உள்ளங்களில் எல்லாம் அரங்கேற வேண்டும்'' என்றார்.

விழாநாயகர் பதிலுரை மொழிகையில், அத்தனை பேர் அத்தனை தூரம் அன்பு காரணமாய்த் தம்மைப் பாராட்டிப் பேசியதற்கெல்லாம், தாம் என்ன கைம்மாறு செய்ய முடியும் என்று கேட்டார். இராமனின் அன்புக்குப் பாத்திரரான அநுமாரின் நிலையில் தாம் இருப்பதாகச் சொல்லி, கம்பன் பாடல் ஒன்றைப் பாடினார்.

டி. கே. சி.க்கு உதவியாளராய்ப் பணி செய்து, பின்னர் கல்கி உதவி ஆசிரியராய் அமர்ந்த எஸ். வி. எஸ். மூன்று நாட்களுக்கு முன்னதாகவே குற்றாலம் சென்று, விழாவிலும் விழா ஏற்பாடுகளிலும் கலந்து கொண்டார். சென்னை திரும்பியதும், விழா பற்றிய கட்டுரை ஒன்றைக் கல்கிப் பத்திரிகைக்காக எழுதுவதற்கு முன்னால், கல்கி ஆசிரியரை அவருடைய வீட்டில் போய்ப் பார்த்து எல்லா விவரங்களையும் தெரிவித்தார். மற்றவர்களும் தெரிவித்தார்கள்.

எல்லோரும் கூறியதைக் கேட்டுவிட்டு டி. கே. சி.க்குக் கல்கி எழுதிய கடிதத்தின் சுருக்கம்:

*(6–11–53) அரங்கேற்று விழா அமோகமாக நடந்துவிட்டது. கம்பருக்கும் தமிழுக்*

---



திபேத்தில் யாராவது விருந்தினரையோ, உறவினரையோ வரவேற்கும் முறை 'அழகு' காட்டுவதுபோல இருக்கும்; நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு தலையாட்டுவார்கள்!

— லப்சங் ராம்பா எழுதிய 'தி தர்ட் ஐ' என்ற நூலிலிருந்து - ஆர். எம்.

ஆயுதங்கள் எதுவுமின்றி உடல் வலிவினால் மட்டுமே எதிரியை மடக்கும் போர்க் கலைக்கு 'மார்ஷியல் ஆர்ட்' என்று பெயர். இத்தகைய போர்க் கலையில் கராத்தே முக்கியமானது. உடம்பை ஒரு நிலையில் இரும்பாக்கிக் கொள்ளும் சக்தி இக்கலைக்கு உண்டு. மின்னல் வேகத் தாக்குதல் என்பதை இந்த யுத்த முறையில்தான் காண வேண்டும். இப்போர்க் கலையைப் பின்னணியாகக் கொண்டு ஒரு படத்தை வார்னர் பிரதர்ஸ் தயாரித்திருக்கிறார்கள்.




போர்க் கலைப் பயிற்சிப் பள்ளி நடத்துவதாக வெளி உலகுக்குக் காண்பித்துக் கொண்டு அபினி போன்ற போதைப் பொருள்களைக் கடத்துதல் விபசாரம் ஆகியவற்றைப் பெருமளவில் தனிப்பட்ட முறையில் ஒரு தீவில் நடத்தி வருகிறான் ஹான் என்பவன். ஆனால் அவனைக் குற்றவாளி என்று வளைத்து உள்ளே தள்ளத் தக்க சாட்சியங்கள் இல்லை. இதைச் சேகரிக்கச் சர்வதேச ஒற்றர் படைத் தலைவர், லீ என்ற ஓர் அற்புதமான, யாராலும் வெல்ல முடியாத திறமை மிக்க வீரனை அனுப்புகிறார். அவனுக்கு உதவியாக இதே போன்று யுத்தக் கலையில் தேர்ந்த மூவரும் போகிறார்கள். லீக்கு இதைத் தவிர இன்னொரு காரியமும் இருக்கிறது. அந்தத் தீவின் போர்க் கலைப் பயிற்சிப் பள்ளியில் உள்ள ஒருவர் லீயின் சகோதரியைத் தாக்கி, அவளை உடைந்த கண்ணாடித் துண்டினால் தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்கு உள்ளாக்குகிறார்கள். இதற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் எண்ணமும் லீக்கு உண்டு.

லீயும் அவன் சகாக்களும் ஹானின் ஆட்களோடு மோதும் காட்சிகள் சண்டைப் பிரியர்களுக்கு முதல்தரமான விருந்து. கால் வீச்சினால் எதிரியைக் கதி கலங்க வைக்கும் கராத்தே போர்க் கலையின் பல்வேறு முறைகளை இப்படத்தில் கண்டு மகிழலாம். படத்தின் இறுதியில் கண்ணாடி மாளிகையில் லீயும் ஹானும் போராடும் காட்சிகள் மெய் சிலிர்க்க வைக்கிறது. பல உருவங்கள் எந்த உருவம் நிஜமானது என்பது புரியாமல் மயக்க வைக்கும் நிலை பிரமாதம். அற்புதமான படம் பிடிப்பு.

- கௌசிகன்

●●● ●●● ●●● ●●● ●●● ●●● ●●● ●●● ●●●

கும் நம் காலத்தில் இவ்வளவு சிறப்புக்கள் நடந்திருக்கின்றன. இதைத்தான் ''பொற் காலம்'' என்று சொல்ல வேண்டும்.

விழாவுக்கு வர முடியாமல் போனதில் எனக்கு எவ்வளவு ஏமாற்றம் என்பதை நண்பர்கள் எல்லாரும் அறிவார்கள். இந்தப் பொல்லாத உடம்பு சமயத்தில் என்னைக் கைவிட்டுவிட்டது.

''கம்பர் தரும் ராமாயண''த்தைப் பத்திரிகைகளுக்கு விமரிசனம் செய்ய அனுப்ப வேண்டியதில்லை. அனுப்பினால், கம்பருக்கு அவர் காலத்தில் ஏற்பட்டபடிதான் ஆகும். வைரப் பரீட்சை மிகக் கடினமான வேலை. கவிதைப் பரீட்சை அதைவிட நூறு மடங்கு கடினமானது. கண்ணாடித் துண்டுக்கும் வைரத்துக்கும் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாத வர்க்கமும் உண்டு.

விட்டு என்னையே விஷயமாய் வைத்துப் பேச ஆரம்பித்து விட்டார்கள்....

வாழ்க்கை லட்சியமாக எண்ணி அரங்கேற்று விழாவை ஆரம்பித்தீர்கள். அபூர்வமான வெற்றியோடும் மகிழ்ச்சியோடும் நிறைவேறியது. எப்படி அனுபவித்திருப்பீர்கள், நீங்களும் ருக்மிணி அம்மாளும் !

ராஜாஜி என்னை மனுஷ வர்க்கத்தோடு சேர்க்காமல் அபூர்வமான பிறவி என்று உளங்கனிந்து பேசினார்கள்... இங்கு நடந்த சம்பிரமங்களை எல்லாம் மனசில் இழுத்து வைத்து, நாலாம் தேதி ஒரு கடிதம் எழுதி இருக்கிறார்கள். எப்படித்தான் இந்தப் பிறவியில் இந்த அனுபவம் எல்லாம் எனக்குக் கிட்டியதோ என்று வியந்து கொண்டும் அனுபவித்துக் கொண்டும் இருக்கிறேன். உடம்பு இருக்கிற நிலையில், இந்த ஔஷதங்கள், ஆன்ம ஔஷதங்கள், உதவத்தான் செய்கின்றன.

இதற்கு ரசிகமணியிடமிருந்து பதில்:

*(10–11–53)* கடிதம் வந்தது. திருப்தியும் ஏமாற்றமும் கலந்து ஓடுகிறது கடிதத்தில். நீங்கள் வந்திருந்தால், ருக்மிணி அம்மாளும் வந்திருந்தால், இருவருக்கும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்திருக்கும் விழா.

வந்தவர்கள், பேசினவர்கள், முக்கியமாக ராஜாஜி, எல்லாரும் கம்பரையும் கம்பர் தரும் ராமாயணத்தையும் கை நழுவ விட்டு

அப்படி உதவ வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் அந்த விழாவுக்குக் கல்கி ஏற்பாடு செய்து, தமது ஆர்வத்தாலும் செல்வாக்காலும் அதை இயக்குவித்தார். ஆனால் அந்த ஔஷதங்களின் குணம் நெடுநாள் நீடிக்கவில்லை; அந்த விழாவே குற்றால முனிவருக்கு இறுதிப் புகழ் விழாவாயிற்று.

*(தொடரும்)*

# ஒரு காம்ப்ளெக்ஸ்

## ஆர்வி






பல்கலைக் கழக அரங்கில் பர்வீன் சுல்தானாவின் இசை நிகழ்ச்சி. சுத்த சாஸ்திரீயமான இந்துஸ்தானி சங்கீதம். பஞ்சாபி சங்கத்தார் ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சி. இருநூறு ரூபாய், நூறு ரூபாய் என்று டிக்கெட்டுகளை அச்சிட்டு வசதி படைத்தவர்கள் தலையில் எல்லாம் கட்டியிருந்தார்கள். பிரபலமான புகழ் பெற்ற பாடகி. கூட்டம் மேலே மேலே பெருகி எல்லா வரிசைகளையும் நிரப்பிக் கொண்டிருந்தன.

வழக்கமாகச் சங்கீத சபாக்களுக்குப் போகிற முகங்களாக இல்லை. பெரும்பாலும் எல்லாம் புது முகங்கள். பஞ்சாபி ஆண் பெண்கள்; சர்தார்ஜிகள், கிர்பான்கள், ஆண் பெண் வித்தியாசமின்றி அவர்களுக்குள்ளே உபசரிப்புகள், வரவேற்புகள். ஒரு தனி நிறம்; தனிப் பளபளப்பு, மினுமினுப்பு. தனிக் களை. வண்ணக் கலவை அரங்கின் ஒளியிலே கண்ணைப் பறித்தன. மொத்தத்தில் பொதுவாகச் சங்கீதத்தை ரசிக்கிற கூட்டமாகத் தோன்றவில்லை.

ஏழாவது வரிசையின் நடுவே இரண்டாவது இடத்தில் உட்கார்ந்து பட்டாம் பூச்சிகளைப் போல் வந்து போகிற பஞ்சவர்ணக் கிளிகளையும் சதை மடிப்புத் தொங்கும் பஞ்சாபிப் பாட்டிமார்களையும் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தான் நாராயணன். நூறு ரூபாய் டிக்கெட்டுகளில் இரண்டை வலுக் கட்டாயமாக அவன் பையில் திணித்துவிட்டார்களே என்பதற்காகத்தான் அவன் அங்கே வந்து உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில் காலியாக இருந்த இடமும் அவனுடையதுதான். துணைக்கு யாரும் அவன் கூட வரவில்லை. வராவிட்டால் என்ன மோசம்? அந்த நூறு ரூபாய் இடம் காலியாகத்தான் இருந்து விட்டுப் போகட்டுமே. கையைக் காலை நீட்டிக் கொண்டு கொஞ்சம் தாராளமாகத்தான் உட்கார்ந்திருக்கலாமே என்று பேசாமல் இருந்தான்.

யாராவது அங்கே உட்கார வந்தால் முதுகுப் பக்கத்தில் ஒட்டியிருந்த சீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஓ — ரிசர்வ்டு சீட்டா?'' என்று வருகிறவர்கள் ஏமாந்துபோய்க்கொண்டிருந்தார்கள்.

இந்துஸ்தானி சங்கீதத்தைப் பற்றி ஓர் அட்சரம் கூட அவனுக்குத் தெரியாது. கர்நாடக சங்கீதத்திலாவது பல ராகங்களின் பெயர் அவனுக்குத் தெரியும். பல கீர்த்தனைகளின் முதலடி கூடத் தெரியும். இந்துஸ்தானி சங்கீதம் என்று ரேடியோவில் வைத்தால் உடனே அதை மூடி விட்டுப் போகிறவன் அவன். அவனுக்கு வந்திருந்த முகங்களைப் பார்த்ததில் ஓர் ஆறுதல். சங்கீதம் என்றால் மீட்டர் என்ன விலை என்று கேட்கிற கூட்டம் தான் அதிகம். மோட்டார் பாகங்களை விற்கும் சில்லறை வியாபாரிகள்; பீடிங் அடிக்கிறவர்கள்; மெக்கானிக்குகள், டூரிஸ்ட் வண்டி வைத்திருப்பவர்கள் — இப்படிச் சில முகங்களைப் பார்த்தபிறகுதான் தான் மட்டும் பலி ஆடு அல்ல என்று அவனுக்கு ஒரு சமாதானம் ஏற்பட்டது.

சென்னையில் இத்தனை பஞ்சாபிகளா? பஞ்சாபிகளில் இத்தனை அழகான பெண்களா என்று அவன் பிரமித்துக் கொண்டிருந்த நேரத்தில்தான் பக்கத்தில் காலியாக இருந்த இடத்தில் பச்சைக் கிளி என்றால் பச்சைக்கிளி போன்ற இளம் பெண் ஒருத்தி வந்து உட்கார்ந்து கொண்டாள். உருவத்தைப் பார்த்துத்தான் பெண் என்று சொல்ல வேண்டும். உடையைப் பார்த்தால் பகங் காளையைப் போல் பெல்பாட்டம்; ஸ்லாக்கு முதலியன.

இளமையும் இன்டிமேட் வாசனையும் அலை மோத வந்து உட்கார்ந்த பிறகு தான் ஏதோ நினைப்பு வந்தவள் போல் அவள் அவனைப் பார்த்து இனிமை பொங்கி வழிய, ''இங்கே யாராவது இருக்கிறார்களா?'' என்று ஆங்கிலத்தில் கேட்டாள். கேட்டதோடு நில்லாமல் இவனை என்ன கேட்பது என்ற பாவனையில் முதுகுப்பக்கம் ஒட்டியிருந்த சீட்டையும்பார்த்தாள். உடனே எழுந்திருக்கவும் முயன்றாள்.

''தட்ஸ் ஆல் ரைட். யூ கான் டேக் தி ஸீட்!'' என்று சர்வ சாதாரணமாக, ஆனால் அவசரத்தோடு சொன்னான் நாராயணன். ''இட்ஸ் மைன்!'' என்று அபயமளித்தான்.

பச்சைக் கிளியாவது — இது ரோஜா நிறக் கிளி. இயற்கையாகச் சிவந்திருந்த நெற்றி கன்னமெல்லாம் அவன் சொன்னதைக் கேட்டவுடன் இன்னும் சற்றுச் சிவந்து கொடுத்தது போல் ஆயிற்று. ஒருவேளை எல்லாம் ஒரு பிரமையோ, என்னவோ!

''தாங்க் யூ !'' என்று தலையைச் சிலுப்பிக் கொண்டாள் அவள். அந்தச் சிலுப்பலில் அவன் நெஞ்சமே நெளிந்து கொடுத்தது.

ஒரு குட்டைக் கை சர்தார்ஜி அவளைப் பார்த்ததும் வேகமாக வந்து, ''அச்சா, தர்சனு ஜீ...'' என்று இந்தியில் ஏதேதோ சொல்லத் தொடங்கினான்.

அது இந்தியோ, பஞ்சாபியோ அவன் வேறு ஒரு நல்ல இடத்தில் உட்கார வைப்பதற்காக அழைத்துக் கொண்டிருந்தான் என்று மட்டும் நாராயணனுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அவள் போய் விட்டால் எதனாலோ அது ஒரு பெரிய இழப்பாகவும் இருக்கும் போல் ஒரு கவலை வந்து விட்டது. ஆனால் நல்லவேளை, அவள் முகத்தில் தோன்றிய முறுவல் மாறாமலே, இந்த இடமே சௌகரியமாய் இருக்கிறது என்று சொல்லுகிற பாவனையில் எதையோ சொல்லி அந்தச் சர்தார்ஜியை அனுப்பி விட்டாள். அப்புறம்தான் நாராயணனுக்கு நல்ல மூச்சு வந்தது.

அவனுடன் கூட வந்த இரண்டு மூன்று பேர் முன்வரிசைகளில் இருந்தபடி கையை உயர்த்தி அங்கே வந்துவிடும்படி அழைத்தார்கள். தர்சனு ஒருகணம் போய் விடுவாள்போலவே இருந்தது. அவள் தயங்குவதற்குள் கற்றுழை நாரைப் பின்னியது போல் தலையை வைத்துக் கொண்டு ஒரு ஸ்தூலமான பெண்மணி அந்த இடத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந் தாள். கையைக் காட்டி அழைத்தவர்கள் அங்கிருந்தபடியே கையை விரித்து, 'வரவேண் டாம்' என்று ஜாடை காட்டி விட்டார்கள்.

நாராயணன் மறுபடியும் பெருமூச்சு விட் டான்.

திடீரென்று இந்திக் கதாநாயகன் மாதிரி ஓர் ஆணழகன் அவளிடம் வந்து என்னவோ கேட்ட போது நாராயணனுக்கு நம்பிக்கையே தளர்ந்து விட்டது. ஆனால் அவள் அவனுக்கு தாக வந்து கொண்டேயிருக்கிறதே என்று கலங்கிப் போனான் நாராயணன். இவள் எழுந்து போய்விட்டால், இந்த இடத்துக்குப் பாஞ்சால நாட்டுப் பயில்வான் மாதிரி, தாடி மீசையை முறுக்கிக் கட்டிய தடியன் எவனாவது வந்து உட்கார்ந்து தொலைக்கப் போகிறானே என்ற கவலை வந்து விட்டது. அதற்காகவே கலங்குவதாக அவன் தனக்குத் தானே சமா தானம் சொல்லிக் கொண்டான். இல்லா விட்டால் இவளுக்கும் தனக்கும் என்ன வந்தது என்றும் சொல்லிக் கொண்டான்.

''ஆறரைக்கு என்று போட்டு விட்டு, ஏழாகப் போகிறது — இன்னும் ஆர்ட்டிஸ்ட் வந்து ஒக்காரக் காணுமே'' என்று இடது பக்கத்திலிருந்தவர் தாமாகக் குறைப்பட்டுக் கொண்டிருந்தார்.



முன் பக்கம் கையை நீட்டிக் காட்டிப் பதில் கூறிக் கொண்டிருந்தாள். அவன் தேடி வந்தவர்கள் முன்வரிசையில் இருப்பதைத் தெரிந்து கொண்டதும், அவன், ''அச்சா, தாங்க் யூ'' என்று சொல்லிவிட்டுப் போன பிறகுதான் நாராயணனுக்கு நம்பிக்கை ஒளி பளிச்சிட்டது.

பட்டுப் புடவையும் பாட்ஜும் அணிந்த பெண்மணிகள் இருவர் அவளைப் பார்த்ததும் முகம் மலர்ந்து, அருகில் தோளைப் பற்றிய படி காதோடு குனிந்து ஏதோ கிசுகிசுக் கவே நாராயணனுக்கு வயிற்றில் புளி யைக் கரைத்தது. அவன் கண்ணை இமைக் காமல் பார்த்தான். அந்தப் பெண்களும் அவளை நடுநடுவில் கவனித்தனர். நாராய ணன் பார்வையைத் திருப்பிக் கொண்டான். நகையொலி கிலுகிலுவென்று சன்னமாகக் கேட்டது. பதிலுக்குப் பக்கத்திலிருந்த இவ ளும் என்னவோ சொல்ல, வந்த பெண்கள் பொங்கி வந்த சிரிப்பைக் கைக்குட்டைக ளால் அடக்கித் தணித்துக் கொண்டே அந்த இடத்தைவிட்டு அகன்றார்கள். பழையபடி வரவேற்பு வேலைகளில் மூழ்ந்தார்கள்.

ஏது, இவளுக்கு இங்கே பல பேரைத் தெரிந்திருப்பதால் ஆபத்துக்கு மேல் ஆபத்

நாராயணன் அவரைத் திரும்பிப் பார்த்தான். சலவை மடிப்புக் கலையாத சட்டையும் நெற்றியில் நடு நாமமுமாக அவர் பளிச் சென்று எழுந்தருளியிருந்தார். அவரை பார்த்ததில் நாராயணனுக்கு ஒரு திருப்தி. அரங்குக்குள் நுழைந்த பிறகு அவன் காதில் விழுந்த முதல் தமிழ்ப் பேச்சு இதுதான். அதுமட்டுமல்ல; சங்கீதத்தை ரசிக்கக்கூடிய முகமாக இவரைத்தான் அவன் பார்க்கிறான். அந்தப் பந்தாவோடு அவர் காணப்பட்டார். வாயில் வெற்றிலைச் சிவப்புக்கும் நெற்றி நாமத்துக்கும் ரொம்பப் பொருத்தமாக இருந்தது.

நாராயணன் அவர் சொல்வதை ஒப்புக் கொள்பவன் போல் முறுவலித்துக் கொண்டான்.

''இத்தனை நாழிக்கு மேலே கச்சேரியை ஆரம்பிச்சால் இரண்டு மணி நேரம்தான் பாடலாம். மூணு பாட்டோ, நாலு பாட்டோதான் பாட முடியும். மணி ஒம்பதாயிடும். அதுக்கு மேலே போனா பஸ் கிடைக்க வாண்டாமா? எல்லாரும் கிளம்பிடுவாங்க!'' என்றார் அவர்.

நாராயணன் நியாயம்தான் என்று தலையை அசைத்து வைத்தான்.

''அகாடமியிலே அப்படித்தான் ஆச்சு. ஒரு அமீர் கல்யாணி; தும்ரி; ஒருமிஸ்ரகமாஸ்; ஒரு பஜன் இவ்வளவுதான் பாடினான்.''

அப்படியா என்பதுபோல நாராயணன் அவர் முகத்தைப் பார்த்தான்.

''ஆறு ஒண்ணு; அந்த மூணே போரும்; அப்படியிருந்தது.''

நாராயணனுக்கு அவரிடம் ஒரு பயம் ஏற்படத் தொடங்கி விட்டது. முன்னே பின்னே தெரியாத இடத்துக்கெல்லாம் அவனை இழுத்துக் கொண்டு போய்த் திரை அடித்து விடுவார் போல இருந்தது. ஏன் வம்பு என்று இந்தப் பக்கம் திரும்பினான். பக்கத்திலிருந்த தர்சன — பெயரே என்ன அருமையாக இருக்கிறது — முதுகுப் பக்கம் இருந்த சீட்டை மறுபடியும் ஒரு தடவை பார்த்துக் கொண்டாள். பிறகு அந்தப் பெயர் மீது மெத்தென்று சாய்ந்து கொண்டாள். அவனுக்கு அவள் தன் மீதே சாய்ந்துகொள்வது போல் இருந்தது.

அரங்குக்குள் இன்னமும் வந்து போய்க் கொண்டிருந்தவர்களுடைய பார்வை யெல்லாம் ஒருசேர அவர்கள் இருவர்மீதும் பதிந்து விட்டுச் சென்றன. நாராயணனுக்கு ஒரு காரணமும் இல்லாமல் சற்றுப் பெருமையாகக் கூட இருந்தது. அந்தப் போலியான பெருமையில் அவன் வலப் பக்கத்துக் கைப்பிடியில் கையை ஊன்றிக் கொள்ளப் போனான். ஆனால் அவளுடைய செழுங்கை அங்கு அவனுக்கு முன்பே தவழ்ந்து கொண்டிருந்தது. இவ்வளவு நேரம் வரையில் அவன்தான் அங்கே கையை ஊன்றிக் கொண்டிருந்தான். இந்த மாற்றம், ஆக்கிரமிப்பு எப்போது நிகழ்ந்ததோ அவனுக்குத் தெரியவில்லை. நிருநிருவென்று ஒரு கை. பூங்காம்பு போல் நீளம் நீளமான விரல்கள். முகமுகவென்று பறித்த வெள்ளரிப் பிஞ்சுகள் மாதிரி இருந்தன.

உடனே அவனுக்கு அவனுடைய அம்மாவின் உபமானங்கள்தான் நினைவுக்கு வந்தன. அவள்தான் இப்படி — பூ —காய் — செடிகளையெல்லாம் ஒப்பிட்டு வர்ணிக்கிறவள். அவனுடைய அத்தை பெண் மங்கள கல்யாணியைப் போய்ப் பார்த்துவிட்டு வந்தபிறகு பசலைக்கொடி, மல்லியரும்பு, பெங்களூர் தக்காளி என்றெல்லாம் உதாரணம் சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் சீதாலட்சுமி ராமஸ்வாமி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாள். இந்த மாதம் இறுதிப் பரீட்சை எழுதிவிட்டாள். இனிமேல் கல்யாணம்தான்.

முன்பெல்லாம் இதே அம்மாவுக்கு அந்த அத்தை வகையறாவைக் கண்டாலே பிடிக்காது. ''எம் பிள்ளை ஒத்தை வேஷ்டி சட்டையோட பட்டணம் போய், திண்டாடித் தெருவிலே நின்னு, காலணா காசில்லாமல் கஷ்டப் பட்டு, பட்டினியும் பசியுமாக கெடந்து, படாத பாடு பட்டு, ஓடா உழைச்சிண்டிருந்த போது எந்த அத்தை ஒத்தாசை செய்யறதுக்கு வந்தாள்! எங்கே இருக்கான், என்ன செய்யறான்னு ஒரு வார்த்தை கேட்டிருப்பாளா? இப்ப அவன் ஒரு நிலைக்கு வந்துட்டான்னு தெரிஞ்சதும் 'எம் மருமானைப் போல உண்டா?'ன்னு கேக்கறா. மவுண்ட் ரோடிலே ஒரு மெக்கானிக்கல் ஒர்க்-ஷாப், ஒரு மோட்டார் ஸ்பேர் பார்ட்ஸ் ஷாப், அசோக் நகரிலே ஒரு வீடு, ஒரு கார்னு வரவா போறவா கிட்டேயெல்லாம் பீத்திக்கிறா. அப்ப அஞ்சு ரூபாக்காக இந்தாடான்னு யார் கொடுத்தா? கடுதாசு போட்டாக் கூட பதில் வராது...!''

இப்படியெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தவள் ஒரு தடவை திருச்சிக்குப் போய்விட்டு வந்தபிறகு எப்படி அடியோடுமாறிவிட்டாள்! பேச்சு தலைகீழாகப் புரண்டு விட்டது. மங்கள கல்யாணி நன்றாகப் படித்திருக்கிறாளாம். படித்த ராங்கியே இல்லாமல் வீட்டுக் காரியங்களை நன்றாகச் செய்கிறாளாம். குடும்பப் பாங்காக, அடக்கமாக இருக்கிறாளாம் கல்யாணம் ஆகி, குடித்தனம் செய்ய ஆரம்பித்தால் சதை பூசினாற்போல் ஆகிவிடுமாம்.

இன்றைக்குச் சாயங்காலம் கூட அம்மா அந்தப் பேச்செடுக்கத் தொடங்கினாள்.

''ரெண்டு டிக்கெட்டை வச்சிக்கிண்டு இப்படியெல்லாம் ஒரு தொணையைத் தேடிண்டிருக்க வாண்டாம், பாரு. பரீட்சை முடியட்டும்னுதான் காத்திண்டிருந்தேன். உடனே உங்க அத்தைக்கு எழுதி மேலே நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டியதுதான். மசமசன்னு இருப்பா அவ. இதெல்லாம் கையோடு கையாச் செய்யறதுன்னு புரியாது அவளுக்கு'' என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

மங்கள கல்யாணியாவது, மண்ணாங்கட்டியாவது! குடும்பப் பாங்கு என்றால் என்ன அர்த்தம் என்று அவனுக்குத் தெரியாதா? அழகைத் தொட்ட கையால் ஆண்டவன் அவளைத் தொடவில்லை என்று அர்த்தம். ஆனால் நாராயணன், அம்மா பேச்சை அடக்கியோ, எதிர்த்தோ பேசவில்லை. மங்கள கல்யாணி பல போட்டிகளில் கலந்து கொண்டு

---

தலைவலியில் சுமார் ஐம்பது வகைகள் இருக்கின்றனவாம்.

மெடிக்கல் வொர்ல்டு — ஆம். எம்.

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

**ஹெடன்ஸா**

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

**கொசுக்களிடமிருந்து விடுபடுங்கள்**



விஞ்ஞான பூர்வமான, சிக்கலம் நிறைந்த மற்றும் மின்சாரத்தின் மூலம் இயங்கும் சாதனமான 'யுனிவர்ஸல்ஸ் எலெக்ட்ரோ மஸ்கிட்டோ ரிபெல்லர்' (Universals Electro Mosquitoe Repeller).

இப்போது இந்தியாவில் விற்பனைக்குக் கிடைக்கிறது. ஒன்றை வாங்கிடுவீர்; உங்கள் அறையைக் கொசுக்களிடமிருந்து பாதுகாத்திடுவீர்.

விலை ரூ. 60. வரிகள் மற்றும் அனுப்புவதற்கான கட்டணங்கள் தனி.

ஒன்றுக்கு ஆர்டர் தருவீர்; வி. பி. பி. மூலம் உங்கள் வீடு தேடி வரும் அதனைப் பெற்றிடுவீர்.

யுனிவர்ஸல்ஸ் எலெக்ட்ரோ மஸ்கிட்டோ ரிபெல்லர்.

**UNIVERSAL TRADERS**
125, (KK) Zakoria Masjid Street
BOMBAY - 400 009

அனைவருக்கும் எமது மனமார்ந்த தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்

# THE PALGHAT CREDIT CORPORATION

(REGD.)
ESTABLISHED: 1950

**No. 5, Nana Rao Naidu Street, T. Nagar, MADRAS - 600 017**
(Near Head Post Office: Phone: 442583)

- **RE - INVESTMENT DEPOSITS:**
  INVEST Rs. 10,000/- AND DRAW Rs. 43,600/- after 145 months. Rs. 500/- and multiples thereof can be invested under this Scheme.
- FIXED DEPOSITS UPTO ... 13% P.A.
- RECURRING DEPOSITS UPTO ... 20% P.A.
- FIVE YEAR CASH CERTIFICATES ... 16% P.A.

**A. S. P. AYYAR**
Managing Partner

*Branches:* GEORGE TOWN, T. NAGAR, AYANAVARAM, PARK TOWN PALGHAT, COIMBATORE, HYDERABAD AND BOMBAY

# உங்களுக்கு விருப்பமான ப்ரூ இப்பொழுது குறைந்த விலைக்கு





ஒரு பெண் காலில் காயம் பட்டுக் கொண்டாள். ''எப்படி ஏற்பட்டது?'' என்று கேட்டார்கள். ''ஸ்டூலில் இடித்துக் கொண்டேன்'' என்று அவள் சொன்னாள்.
அதே காரணத்துக்காகக் காலில் அடிபட்டுக் கொண்ட ஓர் ஆணிடம் அதே கேள்வியைக் கேளுங்கள்: ''எவனோ மடையன் குறுக்கே ஸ்டூலைக் கொண்டு வந்து போட்டு விட்டான்'' என்று அவன் பதில் சொல்வான். ஆணுக்கும் பெண்ணுக்கும் இதுதான் வித்தியாசம்.

-எமர்ஸன் - சாமி

---

தங்க மெடல்கள் வாங்கியிருக்கிறாள். படிப்பிலும் கெட்டிக்காரி. அவன்தான் பி.யூ.ஸி.யைக் கூட முடிக்காமல் ஊரைவிட்டு ஓடி வந்து விட்டான். ஒரு கிராஜுவேட் பெண் கிடைக்கிறாள் என்றால் அதுவும் ஒரு பெருமை தானே' என்பது போல் சும்மா இருந்தான். ஆனால் பெண்கள் என்றால் அழகின் சம்பந்தம் துளியாவது இருக்க வேண்டாமா என்ற நினைப்பும் அவனுக்குக் கூடவே இருந்தது.

கச்சேரி ஆரம்பமாகி விட்டது. நாராயணன் பார்த்துக் கொண்டேயிருந்தான். பக்கத்திலிருந்த ஸ்ரீசூர்ணக்காரர் ஆறரைக் கட்டை சுருதி. மேல் ஷட்ஜமத்துக்கும் மேலே அநாயாசமாகப் போகும் சாரீரம், சாதகம் என்றெல்லாம் நேர்முக வர்ணனை அவ்வப்போது செய்து கொண்டிருந்தார். அவனுக்கோ சங்கீதம் புரியாத வேதனை, பக்கத்திலிருப்பவர் சளசளப்பு' வேதனை, மங்கள கல்யாணி எங்கே, இதோ இந்தத் தர்சனா எங்கே என்று ஒப்பிட்டுப் பார்த்த போது உண்டான வேதனை — ராகமாவது, ஆலாபனையாவது! எங்கேயோ போலோ சஞ்சாரம் செய்கிறாளாம். அங்கேயே செய்து கொண்டிருக்கட்டும் என்று அவன் பல்லைக் கடித்துக் கொண்டான்.

''எக்ஸ்க்யூஸ் மீ!'' என்று இண்டிமேட் மணக்க அவள் அவனை நெருங்கி வந்து அழைத்தாள்.

நாராயணனுக்கு உள்ளூற ஒரு பயம். கலக்கம். ஆங்கிலத்திலேயே சரமாரியாகப் பேசுகிற காரியமெல்லாம் அவனால் முடியாது. ஏதோ சுமாராக, திக்கித் திணறிப் பேச முடியுமே தவிர, ஓகோ என்று பேச அவனுக்கு வராது.

''எஸ்'' என்றான் அவன். திகிலோடு.

அவள் முறுவலித்தபடியே அவனைப்பார்த்து அவன் கையில் ஒரு கர்சீப்பை வைத்தாள். அவனுக்கு இது முதலில் என்னவோ போலக் கூச்சமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. கொடுத்த கர்சீப்பை வாங்கிக் கொள்வதா, வேண்டாம் என்று சொல்வதா என்று புரியவில்லை. ''ஐ திங் தட்ஸ் யுவர்ஸ்!''

அப்புறம்தான் அவனுக்கு விஷயம் புரிந்தது. அது அவனுடைய கைக்குட்டை. எப்போது அதை அவன் அவள் மடியில் நழுவ விட்டானோ, தெரியவில்லை. அவனுக்கு மகா அவமானமாகப் போய்விட்டது. அவள் அவனைப்பற்றி என்ன நினைத்துக் கொள்வாள்?

அவளிடம் மன்னிப்புக் கேட்கலாம் என்று நினைத்தான். ஆனால் வாயை விட்டு வார்த்தைகள் வெளிப்படவே மறுத்து விட்டன. இதெல்லாம் தனக்கு ஒரு காம்ப்ளெக்ஸ் — குறை என்று தன்னையே நிந்தித்துக் கொண்டான். கர்சீப்பையும் அவள் முகத்தையும் மாறி மாறிப் பரிதாபமாகப் பார்த்தான். அவள் பார்வை மேடையின்மீது இருந்தது. ஆனால் முகத்திலிருந்த முறுவல் மாறவில்லை. அந்த முறுவலுக்கு எத்தனையோ பொருள்களைப் பெருக்கிக் கொண்டு போகலாம்.

இடப் பக்கத்திலிருந்தவர் நல்ல சங்கீத ரசிகராக இருக்கலாம்; ஆனால் இங்கிதம் தெரிந்தவராகப் படவில்லை. இவர்கள் கர்சீப்கை மாறியதைக் கவனித்து விட்டுச் சும்மா இருக்கக் கூடாதோ?

''அவளுடையதைக் கொடுக்கிறானா, உங்களுடையதா?'' என்று கேட்டார்.

நாராயணனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. அவர் பேச்சைக் காதில் வாங்காதவன் போல் இருந்து விடப் பார்த்தான்.

''இப்பல்லாம் இப்படிச் சில பேர்...''

நாராயணன் அலுப்பாகச் 'ச்சு' கொட்டினான்.

''யூ ஆர் யங் அண்ட் சார்மிங் ... அப்புறம் வெண்ட் ஆல்சோ...''

''இல்லே. அது என் கர்சீப். தவறி விட்டு விட்டேன். அவள் எடுத்துக் கொடுத்தாள். சங்கீதத்தை ரசிங்கோ, போரும்'' என்றான்.

''காது ரசிச்சிண்டுதான் இருக்கு. சூர்தாஸ் சாஹித்யம். பக்தியும் பிரேமையும் எப்படிக் கலந்து பொங்கிண்டு வருது, பாருங்களேன்'' என்றார் அவர்.

நாராயணனுக்கு மறுபடியும் ஒரு சிறுமை உணர்ச்சி. உயர்ந்த விஷயங்களை ரசிக்கத் தெரியாத தன் பாமரத் தன்மையை எண்ணிக் குன்றிப் போனான். தர்சனா நடுநடுவில் அவனைக் கண் குளிரப் பார்த்தாள்.

''டோண்ட் மைண்ட் ஹிம்'' என்று மெல்லக் காதோடு சொன்னாள்.

அது தேவாமிருதமாகக் காதில் விழுந்தது. சற்றுப் பொறுத்து வேறு பாடலைத் தொடங்கினாள் பாடகி.

''இதுதான் கியால். ரெண்டே பதம். என்ன பிரமாதம் செய்யறா பாருங்கோ!'' என்றார் நாமக்காரர்.

உண்மையில் பாடகியின் சாரீர வளப்பம் அவனைக் கிளுகிளுக்கச் செய்தது. அவன் ஊமை போல அவர் பேச்சுக்குத் தலையை அசைத்தான்.

அந்தப் பாட்டு முடிந்ததும் இடைவேளை. அவனால் மேலும் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. தர்சனாவை விட்டுப் பிரிவது ரொம்ப மனத்தாங்கலாகத்தான் இருந்தது. இருந்தாலும் எத்தனை நேரம் சிறுமைப்பட்டு நொங்குவது? அவன் எழுந்திருந்தான்.

''ஏன் புறப்பட்டுட்டிங்க?'' என்றது நாமம்.

''அசோக் நகர் போகணுமே. ரொம்ப நேரமாயிடுமே...'' என்று கூறிவிட்டு, தர்சனாவின் பக்கம் திரும்பி, ''எக்ஸ்க்யூஸ் மீ?'' என்றான்.

அவள் காலை ஒதுக்கி அடக்கிக் கொண்டாள். அவன் அவளைத் தாண்டி வெளியில் வந்தான். கடைசி முறையாக அவளை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்று ஓர் ஆவல் உந்தியது. ஆனால் எதுவோ, ஒன்று அப்படிச் செய்ய விடாமல் தடுக்கவே, அவன் திரும்பிப் பாராமல் வெளியில் வந்தான்.

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான்முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைத்துள்ளது.

இன்று குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்— தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுப ஈக. (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

“வணக்கம், டாக்டர்! நான் மருதாசலம்....” என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டவாறு உள்ளே நுழைந்தார் அந்த மெக்கானிக்.

“வணக்கம். இப்போதுதான் உங்கள் தொழிற்சாலை மானேஜர்கூட போன் செய்தார். உங்க வயசு என்ன?”

“முப்பத்து மூணுங்க. வேலையிலே முன் போல அத்தனை சுறுசுறுப்பா இருக்க முடியல்லீங்க. நாளுக்கு நாள் உடம்பிலே சக்தி குறைஞ்சுகிட்டே வந்தது எனக்கே தெரிஞ்சதுங்க. இப்போ சில மாதங்களா ரொம்பப் பலவீனமாயிருக்கு....”



● இரத்தச் சோகைக்கு வைட்டமின்களோ, இரும்புச் சத்தோ உட்கொள்ளுமாறும் தரலாம்; ஊசி மூலமும் ஏற்றலாம். ●

குட்மார்னிங் டாக்டர்

# சுறுசுறுப்பு குறையும்போது...

மருதாசலத்தின் கண் இரப்பையின் உட்புறம் நல்ல சிவப்பாக இல்லை. நகங்களும் வெளுத்துக் காணப்பட்டன. சில நகங்கள் மெலிந்து தட்டையாகவும் சில கரண்டிபோல் குழிந்தும் இருப்பதைக் கண்ணுற்றேன். காலில் இலேசான வீக்கமும் இருந்தது.

மருதாசலம் அம்பத்தூருக்குப் பக்கத்துக் கிராமத்திலேயிருந்து தினமும் ரயிலில் வேலைக்கு வருவதாக அறிந்ததும், “வீட்டிலே பம்பாய் கக்கூஸ் இருக்கா?” என்று கேட்டேன்.

“கிராமத்திலே இதெல்லாம் ஏதுங்க? வீட்டுக்குப் பக்கத்திலே இருக்கிற தோட்டத்திலேதான்....”

மருதாசலத்தின் இரத்தத்தைப் பரிசோதனைக்கு அனுப்பியதில் சிவப்பு அணுக்களின் விகிதம் மிகவும் குறைந்து காணப்படுவது தெரிகிறது. ஆரோக்கியமான உடலில் ஒரு க்யூபிக் மில்லி மீட்டர் இரத்தத்தில் ஐந்து கோடி அணுக்கள் இருக்கும். ஆனால் மருதாசலத்தின் இரத்தத்தில் மூன்று கோடி அணுக்களே உள்ளன. அதேபோல் இரத்தத்தில் சிவப்பு அணுக்கள் உள்ளே 'ஹீமோகுளோபின்' என்ற சத்து இருக்கிறது. அதுதான் பிராண வாயுவைத் தசைகளுக்கு வழங்கிக் கரியமில வாயுவை எடுத்துக் கொள்கிறது. 100 கிராம் இரத்தத்தில் 14 கிராம் வரை இருக்கும். அப்படி இருந்தால் 100 சதவீதம் எனலாம். மருதாசலத்துக்கு 40 சதவீதம் தான் உள்ளது. அவரது உடல் உபாதைகளுக்கெல்லாம் காரணம் இரத்தச்சோகையே. ஆங்கிலத்தில் 'அனீமியா' எனப்படும்.

**“இரத்தச் சோகை எப்படி ஏற்படுகிறது? அதனை எவ்வாறு போக்குவது?”**

“கொக்கிப் புழு குடலில் இருந்தால் இரத்தத்தை உறிஞ்சிவிடும். குடலில் கடிக்கும். சிறு குடலில் தங்கியிருந்து பல இடங்களில் கடித்துப் புண்ணாக்கிவிடும். கடித்த இடங்களில் அதன் எச்சில் படுவதன் காரணமாக இரத்தம் கசியும். அதன் விளைவாக நாளடைவில் சோகை ஏற்படும்.

“தரையில் காணப்படும் கொக்கிப் புழு முட்டைகள் மலத்தோடுதான் வருகின்றன. அந்த முட்டைகள் ஈரமும் சூடும் இருந்தால் சிறு புழுக்களாக மாறுகின்றன. காலணி இல்லாமல் தரையில் நாம் நடக்கும்போது, நம் காலின் தோல் மூலம் புழுக்கள் உள்ளே நுழைந்து இரத்தத்தின் மூலம் இருதயத்துக்குப் போய் அங்கிருந்து சுவாசப் பைக்குச் சென்று சுவாசக் குழாய்கள் மூலம் தொண்டைக்கு வந்து அங்கிருந்து வயிற்றுக்குச் சென்று அங்கே சிறு குடலில் இடம் பெறும்! நாளடைவில், ஆண் புழுவும் பெண் புழுவும் சேர்ந்து அநேக முட்டைகள் இட்டு மலத்தோடு வெளிப்படும். இப்படி நீள் பயணம் செய்து வளர்ந்து பெருகும் கொக்கிப் புழுக்கள் பலரது இரத்தச் சோகைக்குக் காரணமாக அமைகின்றன.”

**“இவை பரவுவதைத் தடுக்க என்ன வழி?”**

“கண்ட இடங்களில் மக்கள் மலம் கழிப்பதைத் தடுக்க வேண்டும். பம்பாய் கக்கூஸ் வசதி இல்லாத கிராமப் பகுதிகளில் தரையில் குழி தோண்டி அதனைக் கழிவிடமாகப் பயன்படுத்தலாம்.

“மருதாசலம் மலப் பரிசோதனையும் செய்து 'ரிப்போர்ட்' எடுத்துக் கொண்டு வந்தார். வாய் மூலம் உட்கொள்ளும் இரும்புச் சத்துள்ள மருந்தும், கொக்கிப் புழுவை அழிப்பதற்கு மருந்தும் கொடுத்த பிறகு ஒரு மாதத்தில் மருதாசலத்துக்கு நோய் குணமாயிற்று. பழையபடி அவர் சுறுசுறுப்பாகப் பணியாற்றுவதாக அதிகாரிகள் பாராட்டுகிறார்கள்.”

**“இரத்தச் சோகைக்கு வேறு காரணங்கள் உண்டா?”**

“மூலச் சூடு காரணமாகவும், மாதவிடாய் காலத்தில் பெண்களுக்கு அதிக இரத்தம்வெளி

பேறுவதாலும் இரத்தச் சோகை ஏற்படலாம். தவிர, உணவில் வைட்டமின் 'சி' சத்து இல்லாத காரணத்தினாலும், வைட்டமின் 'பி—12' குறைவினாலும் செம்பு, மாங்கனீஸ் முதலிய உலோகச் சத்துக்கள் குறைவதாலும், கழுத்திலே உள்ள தைராய்டு சுரப்பியில் சத்து குறைவாக இருப்பதாலும் இந்நோய் ஏற்படக்கூடும். இரத்தத்தைத் தாக்கக் கூடிய 'லூக்கிமியா' நோய் கண்டால் வெள்ளை அணுக்கள் பெருகும்; சிவப்பு அணுக்களை அவை தாக்கிக் குறைக்கும். அதுவும் சோகைக்கு ஒரு காரணம். வேறு சில காரணங்களும் உண்டு.''

''இரத்தச் சோகை பெண்களுக்கு அதிகமாக ஏற்படுமா அல்லது ஆண்களுக்கா?''

''பெரும்பாலும் பெண்களே இதற்கு அதிகமாக இலக்காகின்றனர். மாதவிடாய் காரணமாக இரத்தம் வெளியேறுவதால், இழக்கும் இரும்புச் சத்தை ஈடு செய்ய வேண்டியது அவசியம். மருந்து சாப்பிட்டுத்தான் ஆக வேண்டும் என்பதில்லை. தினமும் கீரை சாப்பிட்டாலே போதுமானது. தண்டுக் கீரை நல்ல பலனளிக்கும்.

''கிராமவாசிகளில் நூற்றுக்கு அறுபது பேர் சர்வ சாதாரணமாகக் கொக்கிப் புழுவினால் துன்புறுகின்றனர். சுகாதார முறைகளை அனுசரித்து இதைத் தவிர்க்கலாம்.''

**டாக்டர் இரத்தினவேலு சுப்பிரமணியம்**

கூறக் கேட்டு எழுதியவர்: **ஆர். பி.**

---

# ஒரு கொடியில் இரு மலர்கள்

ஊனமுற்ற பெண்ணாக வரும் சுஜாதாவின் நடிப்பில் எங்குமே ஊனத்தைக் காண முடியவில்லை. சுஜாதா, தன்னைப் பெண் பார்க்க வந்திருக்கும் போலீஸ் அதிகாரியிடம் தன் ஊனமுற்ற கையைக் காண்பித்து ஏங்குவதும், அந்த அதிகாரி பார்வையிலேயே 'பாதகமில்லை' என்று அறிவிப்பதும் பார்ப்பவர்கள் நெஞ்சை நெகிழ்விக்கிறது.

போலீஸ் அதிகாரியாக வரும் ஸ்ரீகாந்த் இந்தப் படத்தில் நல்லவனாக வருகிறார்; நன்றாகவும் நடித்திருக்கிறார்.

ஜெய்சங்கரின் பாகம் நல்லவனானாலும் தன் தங்கையின் நல்வாழ்வுக்காகத் திருடனாக மாறும் பாத்திரம். ஜெய்சங்கருக்காகவே 'டிஷ்யூம் டிஷ்யூம்' சண்டைக் காட்சிகளைச் சற்றுத் தாராளமாகவே புகுத்தியிருக்கிறார்கள். அத்தனை போடு போட்டும் அப்பாத்திரம் நம் மனதில் தங்கவில்லை. ஜெய்சங்கருக்கு ஒரு காதலியையும் சேர்த்திருக்கிறார்கள். ஸ்ரீபிரியா 'சிக்' உடையில் வந்து ஸ்கூட்டர் சவாரி செய்து காதலை வளர்க்கிறார். அது புஸ்வாணம் மாதிரி போய்விட்டது.

தேங்காய் சீனிவாசன் மனைவிக்குப் பயந்தவக்கீல். மனோரமா, அவரையும் பல சாதி நாய்களையும் கட்டி மேய்க்கும் வீராங்கனை. இவர்களால் கிடைக்கும் நகைச்சுவை படம் பார்ப்பவர்களை வாய் விட்டுச் சிரிக்க வைக்கிறது.

திரைக் கதை, வசனம், பாடல்கள் ஆகியவற்றின் பொறுப்பை ஏற்றிருப்பவர் கவிஞர் வாலி. வசனத்தில் வாலி நிமிர்ந்து நிற்கிறார். பாடல்கள் இடம் தவறி ஒலித்து எடுபடாமல் போய்விட்டன.

மேஜர் சுந்தரராஜன் நல்லிதயம் படைத்தவனாகவும், அதே சமயத்தில் கள்ளக் கடத்தல்காரராகவும் வருகிறார். (கொஞ்ச காலத்துக்குக் கடத்தல் விஷயத்தை விட்டு வையுங்களேன்! அலுத்துவிட்டது!) இவர் மூலம் இன்னொரு கதை உருவாகி மூலக் கதையை மிஞ்சியும் ஒட்டாமலும் நிற்கிறது. ஜெய்சங்கரின் சின்ன வயதில் காணாமற் போன தமையனும் மேஜர்! கடைசி வரையில் அது தெரிந்து விடாமல் பாதுகாக்கப்படுகிறது. ஆனால் அந்த 'சஸ்பென்ஸ்' திரைக் கதைக்கு எந்த விதத்திலும் உதவாததோடு விறுவிறுப்பைக் குறைக்கவும் செய்கிறது.

எஸ். பி. முத்துராமன் டைரக்ஷனில் குறை சொல்ல எதுவும் இல்லை. பாபுவின் ஒளிப் பதிவும் நன்றாயிருக்கிறது.

ஜெய் கிரோவின் ''ஒரு கொடியில் இரு மலர்கள்'' — தலைப்பு அருமையாக இருக்கிறது. -காந்தன்



# இன்றையக் கதை

ஹோட்டல் புவனாவின் 'ரூஃப் கார்டன்'. அங்கிருந்து சுதா வீட்டுக்குப் போன் செய்கிறான் பாஸ்கர். காலையிலிருந்து இரண்டு மூன்று தடவை ஃபோன் செய்தாகி விட்டது. அவன் குரலைக் கேட்டதுமே 'ராங் நெம்பர்' என்று கூறி முகத்திலடிப்பது போல் ஃபோனை வைத்து விடுகிறாள் சுதா. இது நாலாவது முயற்சி.

''ஹலோ...''

''சுதா! ஹோட்டல் புவனா ரூஃப் கார்டனிலிருந்து பேசுகிறேன்... பாஸ்கர்–''

''ராங் நெம்பர்!'' — மறுபடியும் டொக்கென்று ஃபோனைக் கீழே வைத்து விடுகிறாள் அவள்.

வேர்வை வழியும் முகத்தைக் கைக்குட்டையால் அழுந்தத் துடைத்துக் கொண்டே மேஜைக்கு வருகிறான் பாஸ்கர். அவன் இன்னும் கோபமாகத்தான் இருக்கிறான்.

அந்தச் 'சாதாரண விஷயத்தை' ரொம்ப முக்கியத்துவம் கொடுத்துப் பெரிதாக்கிக் கொண்டு விட்டாள் ஸ்டுப்பிட் சுதா...

ஹலோ பாஸ்கர்!... 'அந்த விஷயம்' சாதாரணமானதுதானா?

—அவனுடைய மனத்துக்குள்ளிருந்து ஒரு குரல்.

ஆமாம்... அது சாதாரணமானதுதான். இந்தக் காலத்திலே அது ரொம்ப ரொம்பச் சர்வசாதாரணம்...ஆஃப்டர் ஆல் நான் யார்? அவளுடைய காதலன்..., வெறும் காதலன் மட்டுமல்ல, (இந்த நாகரிக யுகத்தில் வெறும் காதலனுக்கே 'அந்த விஷயம்' அத்துபடி!) அவளுக்குக் கணவனாகப் போகிறவன்.

சொல்லப்போனால் அவள் யார்?... ஒரு நாகரிகமான, பணக்கார, கல்லூரி மாணவி. ஞானசுந்தரத்தின் மூத்த செல்ல மகள். பாஸ்கரோடு தினமும் பீச்சில் கை கோத்து உலாவி, ஹோட்டல்களிலே கால்களை உரசிக் கொண்டு, தியேட்டர்களில் தோள்களை இணைத்துக் கொண்டு, டிஸ்கொதேயில் உடல்களை உராய்ந்து கொள்ளும் அளவுக்குப் பழகுபவள். அப்படிப் பழகுவதற்குக் குடும்பத்தாரின் அனுமதியும் பெற்றவள்.

ஆஃப்டர் ஆல் — நேற்று அப்படி என்ன நடந்து விட்டது? அப்படி என்ன யாருமே செய்யாத தவற்றை அவன் செய்துவிட்டான்?

ஆஃப்டர் ஆல் — 'அது' ஒரு த்ரில்... அவ்வளவுதான். இந்தக் காலத்து இளந் தலைமுறையிலே அது ஒரு சாதாரண நடைமுறைப் பழக்கம்... ஆஃப்டர் ஆல்—

டங்....டங்....டங்... ஹோட்டல் கடிகாரம் ஏழு முறை அடித்து ஓய்கிறது.

சாப்பிட்டு முடித்த ஜோடிகள் கலகலவென்று பேசிச் சிரித்துக் கொண்டே எழுந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்.

பாஸ்கரும் எழுந்து கீழே இறங்கி ஸ்கூட்டரில் ஏறுகிறான்.

சுதாவை வீட்டிலே போய்ச் சந்தித்துப் பேசினால் என்ன? ஒருவேளை அவளை நேரில் பார்த்தால் அவள் கோபம் மாறினாலும் மாறலாமே...

ஸ்கூட்டர் பெருமூச்சு விட்டுக் கொண்டு புறப்படுகிறது.

பழகிய வண்டி மாடுபோல் சுதாவின் வீட்டுக்குள் நுழைகிறது பாஸ்கரின் ஸ்கூட்டர். வாசலில் நிற்கும் வாட்ச்மேன் விரைந்து வந்து சல்யூட் அடித்துக் கதவைத் திறந்து விடுகிறான்.

ஹாலிலே நடுநாயகமாக வீற்றிருந்த டெலிவிஷனைப் பார்த்தவாறு குடும்பத்தில் எல்லோரும் உட்கார்ந்திருக்கிறார்கள். மேல்நாட்டில் டி.வி. களைப் பற்றி அப்பா அளக்கும் கதைகளை ஒரு காதால் வாங்கி மறு காதால் வெளிவிட்டபடி, பிள்ளைகள் டி.வி. யைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் கூட்டத்திலே சுதாவைக் காணோம்.

''ஹலோ பாஸ்கர்! குட் ஈவினிங்...''— பாஸ்கரை வரவேற்றுத் தம் அருகில் உட்கார்த்தி வைத்துக் கொள்கிறார் ஞானசுந்தரம். அவர் ரொம்பவும் சோஷல் டைப். நாகரிகம் என்ற பெயரில் எந்த அநாகரிகம் வந்தாலும் முதல் வரவேற்புக் கொடுப்பவர் அவர்.

''என்ன பாஸ்கர், உங்க சுதா எப்போதும் போல் இன்னிக்கு உங்களோட ஊர் சுத்தக் கிளம்பலியே, என்ன விஷயம்? ஏதாவது ஊடலா?'' என்று பெரிதாகச் சிரிக்கிறார் அவர். இயல்பாகவே பருத்துப் பூத்திருக்கும் அவர் உடல் சிரிக்கும்போது மேலும் விம்மிக் குலுங்குகிறது.

''நேத்து ராத்திரியிலிருந்து ஒருமாதிரியாய் இருக்கிறாள் குழந்தை. என்னன்னு கேட்டால் ஒண்ணுமே சொல்ல மாட்டேங்கறா. நீங்களாவது கேட்டுப் பாருங்க...'' என்று வழியனுப்பி வைக்கிறாள் மிஸஸ் ஞானசுந்தரம்.

வண்ணக் 'காயர்' விரித்த மாடிப் படிகளை இரண்டிரண்டு படிகளாகத் தாவி மேலே செல்கிறான், பாஸ்கர். சுதாவின் அறை. பாதிக் கதவு திறந்திருக்கிறது.

உள்ளே படுக்கையில் — வாசலுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு ஒருக்கணித்துப் படுத்தவாறு இடது கை பாப் செய்த தலைமுடிக்குள் நுழைந்து தாங்கி நிற்க, ஆழ்ந்த சிந்தனையின் அடையாளமாக வலது கால் மட்டும் இலேசாகப் பக்கவாட்டில் அசைந்து கொண்டிருக்கிறது.

சற்று நேரம் வாசற்படியிலே நின்று அவளைப் பார்க்கிறான் பாஸ்கர்.

நேற்று இரவு அணிந்திருந்த அதே மரூன் கலர் ஸ்கர்ட். — அதே மாட்சான ப்ளவுஸ்—

அவனுடைய நினைவில் நேற்றைய நிகழ்ச்சி வெடித்துச் சிதறுகிறது...

நேற்று கிட்டத்தட்ட இதே நேரத்தில் அவன் இந்த அறைக்குள் நுழைந்தபோது—

சாயந்திரமே அவனுக்குப் போன் செய்தாள் அவள். ''ஹலோ பாஸ்கர்! நான் இன்னிக்கு ஹோட்டலுக்கோ, வேறு எங்குமோ வர முடியாது...''

''ஏன் சுதா?''

''வீட்டிலே யாருமே இல்லை. அப்பாவுக்கு ஏதாவது அர்ஜண்டாய் ஃபோன் வந்தால் நான்தான் அட்டண்ட் பண்ணப் போறேன். டாடி, மம்மி, பிள்ளைகள் எல்லோரும்

எங்க கிராமத்துக்கு ஒரு கல்யாணத்துக்குப் போயிருக்காங்க...''

''குடும்பத்தோட போயிருக்காங்களே, யார் வீட்டிலே கல்யாணம்?''

''என் மாமா மகனுக்குக் கல்யாணம்.''

''ஏன் நீ மட்டும் போகலே?''

''அந்தப் பட்டிக்காட்டானுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக்கனும்னு ஒரே ஆசை. என்னைச் சுத்திச்கிட்டே திரிவான். நான் முடியாதுன்னு கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டேன். அதனாலே அவங்க வீட்டிலே என் மேலே கோபம். அதுதான் நான் மட்டும் அந்தக் கல்யாணத்துக்குப் போகலே.''

''ஓ. கே... ஸீ யூ டுமாரோ...'' என்று போனை வைத்துவிட்ட பாஸ்கருக்கு நேரம் ஆக ஆக அன்று மாலை முழுவதும் சுதா இல்லாமல் தனியே இருப்பது என்னவோ போல் இருந்தது. 'அவள் வீட்டுக்குப் போய்ப் பேசிக் கொண்டிருந்து விட்டு வரலாமே?' என்று ஸ்கூட்டரில் கிளம்பி விட்டான்.

பங்களாவுக்குள் அவன் நுழைந்தபோது சமையற்காரன் வெளியே புறப்பட்டுக்கொண்டிருந்தான்.

''வாங்க ஸார்! வாங்க... நல்லவேளை, சுதாம்மாவுக்குப் பேச்சுத் துணையாய் நீங்க வந்திட்டீங்க. நான் அவசரமாய் மார்க்கெட்டுக்குப் போக வேண்டியிருக்கு. காய்கறி வாங்கிக்கிட்டு வந்து ராத்திரிச் சாப்பாடு சமைக்கனும். மழை வேறே பெரிசாய் அடிச்சு ஊத்தும் போலே இருக்கு...'' என்று வானத்தைப் பார்த்தவாறு ஒரு கையில் குடையும் மறு கையில் பையுமாக வேகமாக வெளியேறினன் அவன்.

பாஸ்கர் ஸ்கூட்டரைப் போர்டிகோவில் நிறுத்திவைத்து விட்டு, ''சுதா... சுதா!'' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தான்.

மாடியிலே டேப் ரிகார்டரிலிருந்து ஏதோ ஹிந்திப் பாட்டு — காபரே டான்ஸ் பாடல் — முழங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கூச்சலில் அவன் கூப்பிட்டது எப்படி சுதா காதில் விழும்?

மாடிப் படிகளைத் தாவி அவள் அறைக்கு வந்தான் பாஸ்கர்.

அவன் வாசலில் வந்து நின்றபோது—

உள்ளே சுதா படுக்கையில் வாசலை நோக்கிக் குப்புறப் படுத்தவாறு, வயிற்றுக்கும் மார்புக்கும் இடையில் அணையாக வைத்த தலையணையில் இரு கைகளையும் ஊன்றித் தலையைத் தாங்கிக் கொண்டு ஏதோ ஒரு புத்தகத்தைச் சுவாரசியமாகப் படித்துக் கொண்டிருந்தாள். மினியளவான ஸ்கர்ட், இறுகிய ப்ளவுஸ். படிக்கிற சுவாரஸ்யத்தில் கால்களைப் பின்னால் மடித்து மாற்றி மாற்றி ஆட்டிக்கொண்டிருக்க... அந்த அழகுக் காட்சி, பாஸ்கரின் உள்ளத்தைச் சுருக்கென்று கவர்ந்து உணர்ச்சிகளை முறுக்கேற்றிவிட்டது.

''சுதா!...'' என்று அடித் தொண்டையில் கரகரத்த பாஸ்கர் மெதுவாகப் படுக்கையில் வந்து உட்கார்ந்து அவள் தோள்களைத் தொட்டு இழுத்தான்.

''ஹாய் பாஸ்கர்!... என்ன இது?'' என்று சற்று விலகியவாறு துள்ளி எழுந்த சுதாவை





கணவர் எழுதி வைத்த உயிலை எடுத்து வாசித்துப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனாள் மனைவி.

சொத்து முழுதும் யாரோ தூரத்து உறவுக்காரிக்கு எழுதி வைக்கப்பட்டிருந்தது. கோபம், கோபமாக வந்தது அவளுக்கு. நேரே கல்லறைக்குச் சென்று, கணவனது சமாதியில் நிறுவ இருக்கும் நினைவுச் சின்னக் கல்லில் எழுத இருக்கும் வாசகத்தை மாற்றிவிடுவது என்று தீர்மானித்தாள். அந்த வேலையைப் பற்றி விசாரித்தபோது, ''அதுவா? முன்னமேயே முடிந்துவிட்டதே!'' என்று கூறி ''அமைதியாய் ஓய்வெடுங்கள்'' என்ற வாசகம் பொறிக்கப்பட்ட கல்லைக் காட்டினான் கல்தச்சன்.

சற்றே யோசித்தாள். ''சரி, இந்த வாசகத்துக்கு முன்னால் 'நாம் மறுபடியும் சந்திக்கும்வரை' என்ற சொற்களைச் சேர்த்துவிடுங்கள்'' என்று கூறி விட்டு நிம்மதியோடு வீட்டுக்கு வந்தாள் அவள்.

பேஜண்ட் - ''தழல்''

---

அவன் விடவில்லை. சட்டென்று பாய்ந்து இறுக அணைத்தான். அவள் திமிறினாள்.

''நோ... பாஸ்கர்!... லீவ் மீ...விட்டுடு.''

''சுதா!.... ப்ளீஸ்...'' என்று மேலும் மேலும் அவன் பிடியை இறுக்க, திடுமென்று வானத்திலே இடியும் மின்னலுமாய் முழங்கி மழை பெய்யத் தொடங்கியது. அந்த மழையின் பேரிரைச்சலிலே, இந்திப் பாட்டின் காட்டுக் கூச்சலிலே, அவளுடைய கூக்குரல் யாருக்குமே கேட்காமல் போய்விட்டது...

எல்லாம் ஓய்ந்து போன பிறகு ''யூ ப்ரூட்! கெட் அவுட்!'' என்ற சுதாவின் கூச்சல் வீட்டின் அஸ்திவாரத்தையே குலுக்கியது.

அவளுடைய கோபத்தைக் கண்டு சற்றே நிலைதடுமாறிப் போனான் பாஸ்கர்.

''சுதா! ஏன் இப்படி நீ—''

''ஐ ஸே, யூ கெட் அவுட்.'' — மறுபடியும் காயம் பட்ட புலியாய்ச் சீறினாள் அவள்.

ஏதோ ஓர் உணர்ச்சி வேகத்தில் சூழ்நிலையின் பாதிப்புக்குள்ளான மோக வெறியில், அறிவிழந்து தன்னை மறந்துவிட்ட பாஸ்கர் தன் செயலைப் பெரிய தவறாகக் கருதவில்லை.

ஆனால் எல்லாம் சரியாகப் போகவில்லை. இந்த விஷயத்தை ஒரு 'மாடர்ன் கேர்ள்' இவ்வளவு சீரியஸாக எடுத்துக் கொள்வாள் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

ஒருநாள் இடைவெளியாவது அவளுடைய நியாயமற்ற கோபத்தை மாற்றி யிருக்காதா?

சோக சித்திரமாகப் படுக்கையில் கிடக்கும் சுதாவை நோக்கி மெதுவாக வருகிறான்.

''சுதா!...''

அவன் குரல் கேட்டு அவளுடைய வலது கால் ஆட்டம் சட்டென்று நிற்கிறது. ஆனால் அவள் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை.

பாஸ்கர் அவள் முன்னால் வந்து ஒரு நாற்காலியில் உட்காருகிறான்.

''சுதா!...உன்னை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.... ஒரு படித்த பெண்...''

சடாரென்று தலையைத் தூக்கி அவனைப் பார்க்கிறாள் சுதா. கண்களிலே நெருப்புப் பொறிகள் கனல்கின்றன.

''எஸ் பாஸ்கர்! உன் மாதிரிப் படித்த ஆண்களையும்தான் என்னால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. எவ்வளவு படித்தால் என்ன, எவ்வளவு நாகரிகமானவனாயிருந்தால் என்ன — ஆண் ஆண்தான்!''

கடுகடுத்த அவள் முகத்தைப் பார்க்கவே அவனுக்குப் பயமாக இருக்கிறது. நாற்காலியின் விளிம்புகளைத் தன் நடுங்கும் விரல்களால் தடவிக் கொண்டே பேசுகிறான்.

''சுதா! இந்த விஷயத்துக்காக நீ இவ்வளவு ஆத்திரப்படறதிலே அர்த்தமில்லை. ஆஃப்டர் ஆல் — இது ஒரு த்ரில்...''

''இதுக்குப் பேர் த்ரில் இல்லே பாஸ்கர்! திருட்டுத்தனமாக, ஒழுங்கீனமாக, யாருக்கும் தெரியாமல் நடக்கிற இதிலே த்ரில் எதுவும் இல்லே. இந்த விஷயம் உண்மையிலேயே த்ரில்லா இருக்கணும்னுதான், முதலிரவு ஏற்படுத்தியிருக்காங்க. இனிமேல் நான் முதலிரவு அன்றைக்கு மங்கள வாத்தியங்கள் முழங்க, தோழிகள் கேலி செய்யத் தலை குனிந்து, வெட்கத்துடன் அறைக்குள்ளே நுழையறதிலே என்ன அர்த்தம் இருக்கு?'' முகத்தை மூடிக்கொண்டு கேவி அழுகிறாள் சுதா.

''இதிலே அழறதுக்கு என்ன இருக்கு, சுதா?... நான்தானே உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்? என்னமோ யாரோ ஒருத்தன் உன்னைக் கெடுத்துட்டு ஓடிப்போன மாதிரி ஏன் இப்படிக் கவலைப்படறே?''

''டோன் டாக், நான்ஸென்ஸ்!'' என்று வெடிக்கிறாள் சுதா. அவள் உடம்பெல்லாம் துடிக்கும் ஆவேசத்தை அவன் உணர்கிறான். ''என்னைப் பொறுத்தவரையில் இது என் இஷ்டம் இல்லாமல் கட்டாயப்படுத்திப் பெண்ணின் பலவீனத்தையும் ஆணின் திமிரையும் பயன்படுத்தி நீ செய்த அசரத்தனமான காரியம்!'' முகம் சிவக்க, உதடுகள் துடிக்கக் கூவுகிறாள் அவள்.

''நீ எதை எதையோ அனாவசியமாய் நினைச்சு அலட்டிக்கிறே, சுதா! வாழ்க்கையிலே இதையெல்லாம் காலத்தை யொட்டி சகஜமாக எடுத்துக்கணும்... ஆஃப்ட்ர் ஆல், வாழ்க்கை என்கிறது ஒரு விளையாட்டு. அதை விளையாட்டாக வாழ்ந்து அனுபவிக்கணும்.''

''ஆமாம்! வாழ்க்கை என்கிறது ஒரு விளையாட்டுத்தான். ஆனால் எந்த விளையாட்டுக்கும் சில கட்டுப்பாடுகள், சில ஒழுங்குகள் 'ரூல்ஸ்' உண்டு. அவைகளுக்குக் கட்டுப்பட்டு விளையாடினால்தான் 'ஃபேர் ப்ளே'. கட்டுப்பாட்டை மீறிக் காட்டுமிராண்டித்தனமாய் விளையாடினால் அது 'ஃபவுல் ப்ளே' — உலகத்திலே எல்லோரும் 'ஃபேர் ப்ளே'யைத்தான் விரும்பி ரசிப்பாங்க. 'ஃபவுல் ப்ளே'யை யாரும் விரும்ப மாட்டாங்க...''

அவளுடைய பாயின்டே பூமராங்மாதிரி திரும்பி வந்து அவனைத் தாக்குகிறது.

இனி அவளோடு விவாதித்துச் சமாதானம் செய்ய முடியாது என்பதைப் புரிந்துகொண்டு மெதுவாக அவளை நோக்கி வந்து, படுக்

பொங்கிவரும் புது நுரைவளம்

# பாண்ட்ஸ் ஷாம்பூ

தூய நீராட்டு, துலக்குவதில் சீராட்டு

நீண்டு அடர்ந்த கூந்தலுக்கும் நிர்மலப் பொலிவு...
நேர்த்தி மிளிரும் பரிசுத்தம்




எத்தனை முடி ஈனமாயினும் சரி, குழல் முழுவதையும் குமிழ் நுரையில் மூழ்கடித்து செழுமை பொழிவது பாண்ட்ஸ் ஷாம்பூ. நீடித்துநிற்கும் நுரைச் செல்வம், கூந்தலுடன் கூடிக் குலவும், அடி முதல் நுனி வரை முடிமீது பரிசுத்தம் சுடர்வீசச் செய்திடும்.

எந்த வகையான சிகைக்கும் ஏற்ற வகையறிந்து வழங்குகிறது பாண்ட்ஸ்: பியூட்டி, எக், டானிக், அல்லது லெமன், மணம்புரிய வைப்பீர் <u>உங்கள்</u> தோகையிலே பாண்ட்ஸ் ஷாம்பூ. துவங்கட்டும் இந்த அழகு நேசம், துலங்கட்டும் உங்கள் கேசம்.

சீஸ்பரோ-பாண்ட்ஸ் இன்க். (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவில் இணைக்கப்பட்டது).

லின்டாஸ்—CPC, SH, 1-140 TM

# புதிய அனுபவம், பேரானந்தம்

ADROIT/925



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



**செஞ்சுரி** -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

கையின் ஓர் ஓரத்தில் உட்கார்ந்து கொள்கிறான்.

''சுதா! ப்ளீஸ் எக்ஸ்யூக்ஸ் மீ... நான் செய்தது தப்பு என்றே வைத்துக் கொள்வோம். என்னை மன்னித்துவிடு. அதற்காக உணர்ச்சி வயப்பட்டு வார்த்தைகளைக் கொட்டாதே. சீக்கிரமே பெரியவர்களிடம் சொல்லி முகூர்த்தம் பார்க்கச் சொல்கிறேன். ப்ளீஸ், சீயர் அப், சுதா!'' என்று பணிந்த குரலில் கெஞ்சுகிறான் பாஸ்கர்.

''நோ மிஸ்டர் பாஸ்கர்! எல்லாத் தவறுகளையுமே வெறும் 'எக்ஸ்கியூஸ் மீ' யால் சரி செய்துவிடமுடியாது. இந்தச் சம்பவத்துக்குப் பிறகும் நான் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டால் நீ இப்போது செய்தது தவறு என்று நான் சொன்ன குற்றச்சாட்டுக்கே அர்த்தம் இல்லாமல் போய்விடும்...''

பாஸ்கரின் தலையில் மடாரென்று ஓர் இடி விழுந்தது போன்ற உணர்ச்சி.

''சுதா! வாட் டூ யூ சே?''

''மாம்பழத்தைத் திருடித் தின்றவனுக்கு மாமரத்தையே கொடுத்திடறது எப்படி நியாயமாகும்? அந்த மாமரத்தை அவன் தொடக்கூட முடியாமல் செய்கிறதுதான் நியாயம் – இல்லையா?'' அவள் குரலில் ஒலிக்கும் வன்மம் அவனைத் திக்குமுக்காடச் செய்கிறது.

''வாட் டு யூ மீன்?''

சற்றே நிலைதடுமாறிப்போன பாஸ்கர் சடாரென்று நிலையூன்றிக் கொண்டு, மென்மையாகப் புன்னகை பூக்கிறான்.

''என்ன சுதா! ஆச்சரியமாக இருக்கிறது? கற்பழித்தவனைக் கெஞ்சிக் கூத்தாடிக் கல்யாணம் செய்து கொள்ளும்படி பெண்கள் வேண்டிக்கொள்வதுதான் வழக்கம். ஆனால் நீ?... உன் ஸ்டேட்மெண்ட்படி, என்னால் கற்பழிக்கப்பட்ட உன்னை வேறு யார் கல்யாணம் செய்து கொள்வார்கள்?''

அவனுடைய இக்கட்டான கேள்வி, அவளை இம்மியும் திடுக்கிடச் செய்யவில்லை.

''என்ன? யார் கல்யாணம் செஞ்சுக்கு வாங்க என்பது இப்போது பிரச்னை இல்லை. உன்னை நான் கல்யாணம் செஞ்சுக்க முடியுமா என்பதுதான் இப்போது பிரச்னை... அந்தப் பிரச்னைக்கு இப்போது என் பதில்– 'நோ...முடியாது' என்பதுதான்.''

அவளுடைய தீர்மானமான பேச்சு, பொட்டில் அடித்தது போல் அவனுடைய தலையைச் சுற்ற வைக்கிறது.

தன்னுடைய முட்டாள்தனத்தால் எத்தகைய சுதாவை இழந்து விட்டோம் என்பதைப் புரிந்து கொண்டு தவிக்கிறான்; அந்தத் தவிப்பிலே இன்னொரு முட்டாள்தனமும் செய்து விடுகிறான்:

''சுதா! நீ என்னை வேண்டாம்னு சொல்லிட்டா, நீ கற்பிழந்ததை வெளியே சொல்ல எவ்வளவு நேரமாகும் எனக்கு?''

மெதுவாகச் சிரித்துக் கொள்கிறாள் சுதா. படுக்கையிலிருந்து எழுந்து அவன் முன்னால் நேரடியாக நின்று அவனை ஊடுருவிப் பார்க்கிறாள்: ''சபாஷ்! நீ எவ்வளவு அதள பாதாள கீழ்த்தனத்துக்குப் போய் விட்டாய் என்று எனக்குப் புரிகிறது.... ஹீரோவிலிருந்து வில்லனாகி இப்போது ப்ளாக்மெயிலர் நிலைக்குத் தாழ்ந்து போயிட்டே!... சீ! நீ ஒரு ஆண்பிள்ளையா?''

அவளுடைய பார்வையிலே ஓர் அற்பத் தூசியாக அவன் கீழே சரிந்து விழ்கிறான்.

பாஸ்கர், மறுபடியும் அறிவை இழந்து விடுகிறான்: ''சுதா! நீ இல்லாட்டா எனக்கு இன்னொருத்தி மனைவியாகக் கிடைச்சிடுவா. ஆனால் உனக்கு? உன்னை எந்த மடையன் கல்யாணம் செஞ்சுக்க வர்றான்னு பார்த்திடறேன்.''

அவள் இப்போது பலமாகவே சிரிக்கிறாள்:

''மிஸ்டர் பாஸ்கர்! கற்பழிச்ச மிருகமான உன்னையே கட்டிக்க ஒருத்தி முன்வர்றபோது, கற்பழிக்கப்பட்ட நிரபராதியான என்னைக் கட்டிக்க ஓர் ஆண்பிள்ளை நிச்சயமாக முன் வருவான். அப்படி ஓர் ஆண்பிள்ளை வர்ற வரை நான் காத்திருப்பேன். யு மே கோ!'' என்று வாசற்படியை நோக்கித் தன் கையைக் காட்டிக் கொண்டு நின்றாள் சுதா.



## சிங்கச் சோதனை

''சாம்சன் டிலைலா'' திரைப்பட ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது. ரதம் வேகமாக ஓடிவந்து நின்றது. விக்டர் மெச்சூர் குதித்திறங்கி நின்றார். சிங்கம் சுமார் இருபதடி உயரத்திலிருந்து பாய்ந்தது! மெச்சூர் உருண்டு பத்தடி தூரம் தாண்டி விழுந்து கிடந்தார்! மிகுந்த பலசாலியாகச் சித்திரிக்கப்பட வேண்டிய சாம்சன் ஒரு சிறுவனைப் போல் தூக்கி எறியப்பட்ட கோலிக்கூத்தைக் கண்டு டெமில்லி திகைத்தார். ஆனால் அயரவில்லை. மெச்சூரின் எடையைக் கூட்ட ஏற்பாடு செய்தார். அதிலும் ஒரு சிக்கல்! உணவுப் பொருளாகக் கொடுத்தால் சதை போட்டு உருவம் பருத்துவிடும்; அழகே உடந்தைக்கட்டு போய்விடும்.

எனவே உணவுப் பொருள்களில் உள்ள சத்தை ஊசி மருந்துகளாகவும் கேப்ஸ்யூல் மாத்திரைகளாகவும் தயாரித்து ஊட்டம் தரப்பட்டது. சுமார் ஐந்து மாதங்களில் மெச்சூரின் எடை முந்நூற்றிருபது ஆனது! இம்முறை வெற்றி என்ற முடிவுடன் ஷூட்டிங் தொடங்கியது! இம்முறையும் மெச்சூர் எட்டடி தூரம் உருண்டு விழுந்தார்! காரணம் இதற்குள் சிங்கத்தின் எடை நானூறாகிவிட்டது! டெமில்லி குழம்பினார்! சரி - சிங்கத்தைப் பட்டினி போட்டு எடையைக் குறைத்து அதே நேரம் மெச்சூரின் எடையைக் கூட்டினால் சரியாகிவிடும் என்று முடிவு செய்தார். ஆனால்! அதிலும் ஓர் ஆபத்து இருந்தது. பட்டினியுடன் மெச்சூரின் மீது பாயும் சிங்கம் அவரது தலையைப் பலகாரம் பண்ணிவிட்டால்?

கடைசியாக ஒரு முடிவு செய்தார்! சில நாட்கள் சிங்கத்துக்கு அரை வயிறு உணவு! மெச்சூருக்கு முழு மூக்குடன் ஊட்டம்! ஷூட்டிங் தினத்தன்று மட்டும் சிங்கத்துக்கு வயிறு நிரம்ப உணவு!

ஷூட்டிங் தொடங்கிற்று! சிங்கம் பாய்ந்தது! மெச்சூர் நின்ற இடத்திலிருந்து ஓர் அங்குலம்கூட நகராமல் - தடுமாறாமல் - அதைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்! காட்சி அருமையாக அமைந்தது. இந்த ஒரு காட்சிக்காக ஓர் ஆண்டும் ஏராளமான பொருட் செலவும் ஆயிற்று. - தஞ்சை மணியன்



## ஃபோட்டோ பேஜ்

உழைப்பில்
தோழமை !

சோம்பலில்
ஒற்றுமை :

புகைப்படங்கள் : சேகர்
ஜி. பிரபாகர்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

கோத்ரெஜின்

# புதிய டர்கிஷ் பாத்




## அமோகமான சோப், நம்பமுடியாத விலையில்

**Re.1·00** (வரிகள் தனி)

கோத்ரெஜ் மட்டுமே அளிக்கக் கூடிய சோப் அபரிமிதமான நுரை...நீடித்த உபயோகம்...புத்துணர்ச்சியளிக்கும் நறுமணம் மற்றும் சிக்கன விலை.

**கோத்ரெஜின் டர்கிஷ் பாத்**

Interpub/GTB/1/75/TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு